



தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பிரமாதிச ஆடி (16-7-73) [கருணை 10

## திருமந்திரம்

அன்பும் சிவமும் இரண்டென்பரறிவிலார்
அன்பே சிவமாவ தாருமறிகிலார்
அன்பே சிவமாவதாரு மறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே

சிவசிவவென்கிலர் தீவினையாளர்
சிவசிவ வென்றிடத் தீவினைமாளுஞ்
சிவசிவ வென்றிடத் தேவருமாவர்
சிவசிவ வென்னச் சிவகதிதானே.

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்த
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றால் சொல்லுமாறதெங்ஙனே

---

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்
சென்னை – 600 087

● திருநெல்வேலி ஜங்ஷனிலிருந்து மேற்கே ஒரு மைல் தூரத்தில் திருநெல்வேலி நகர். நகர் நடுவில் திரு. சுவாமி நெல்லையப்பர் ஸ்ரீ காந்திமதி யம்மன் கோவில் விளங்குகிறது. பஞ்ச சபைகளில் ஒன்றாகிய தாம்பிர சபையை உடையது.

● போதுமான அளவு நீரில் காய்கறி வகைகளையும் பருப்பு தானிய வகைகளையும் சமைப்பதினால் உயிர்ச் சத்துக்களை சேமிக்கலாம். காய்கறிகளை அதிகநீரில் வேகவைக்கக் கூடாது. வேக வைக்கும் நீரை அகற்றக் கூடாது.

● உலகத்திலேயே சமையல் கலை பற்றிய புத்தகம் முதன் முதலில் சுமார் 4700 ஆண்டுகளுக்கு முன் சீனாவில் வெளியாயிற்று. அதன் பெயர் ஹோன்சோ. அதனை எழுதியவர் ஷென்னுங் என்னும் சீனச் சக்கரவர்த்தி.

● விளக்குச் சுடரில் தீயுமிருக்கிறது. சூடுமிருக்கிறது. தீயிலிருந்து சூட்டினையோ சூட்டிலிருந்து தீயினையோ பிரிக்க முடியாதபடி அவை ஒன்று சேர்ந்திருக்கின்றன. அதுபோல ஆண்டவனிடமிருந்து சக்தியையோ, சக்தியிடமிருந்து ஆண்டவனையோ பிரிக்கமுடியாது.

● ஆன்ம குணமாகிய அகங்காரம், சங்கற்பம், குரோதம் மோஹம் என்பவற்றையே அமுதாகச் சமர்ப்பித்தல் என்னும் பாவனையாகும் நைவேத்தியம்.

● வட்டத்தில் எந்த இடத்திலிருந்தும் மத்திக்குச் செல்ல வழியுண்டு. எவ்வளவு பெருந் தவறானாலும் இறைவனிடம் செல்ல வழியுண்டு.

● மந்திரத் தன்மை இல்லாத எழுத்தும் மருத்துவத்துக்குப் பயன்படாத வேரும், ஒன்றுக்கும் தகுதியில்லாத மனிதனும் உலகில் இல்லை. தகுதி உணர்ந்து இவற்றைப் பயன்படுத்துவோனே உலகில் அறிஞன்.

● மண்எண்ணை பூமியிலிருந்து எடுத்ததும் பச்சை நிறத்தில் கட்டியான பொருளாகவே இருக்கும். அதைக் காய்ச்சி வடித்து சுத்தம் செய்யும் போதுதான் பாச்சை உருண்டை செய்யப் பயன்படும் நாப்தலீன் கிடைக்கிறது.

● வேகமாக நீர் ஓடும் ஆற்று ஜலம், அதிக ருசியாக இருப்பதற்குக் காரணம், அதிகமான அளவில் காற்று அதில் கலந்திருப்பதே ஆகும். நீரைக் கொதிக்க வைத்தால் அதில் உள்ள காற்று வெளியேறிவிடுகிறது. அதனாலேயே கொதிக்க வைத்த குடிநீர் சுவையாக இருப்பது இல்லை.

● எல்லாரும் நம்மைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நாம் நினைக்கிறோம். இல்லை. அவர்களும் நம்மைப்போல் தங்களைப் பற்றியே தான் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

● மனிதனைத் தவிர மிருகங்கள் எல்லாம் குறுக்கே வளர்ந்திருக்கின்றன. மனிதன் ஒருவன்தான் நெடுக வளர்ந்திருக்கின்றான். குறுக்கே வளர்வதைவிட்டு மேலே பார்க்க வேண்டுமென்று ஸ்வாமி மனிதனை வைத்திருக்கிறார்.

● சஞ்சலமாகிய சேற்றில் வழுக்கி வழுக்கி விழுந்து கொண்டிருக்கிறோம். சேற்றிலிருந்து எழுந்திருக்க வேண்டுமென்றால் சேற்றில் நம்மைப்போல புதைப்படாமல் கரையில் இருக்கும் ஒரு கெட்டியான வஸ்துவை பிடித்துக் கொண்டால்தான் கரையேற முடியும். அந்தக் கெட்டியான வஸ்துவே ஈஸ்வரன்.

● துணி அழுக்கில்லாமலிருந்தால் போதாது. உடம்பும் வீடும் அழுக்கில்லாமலிருந்தால் போதாது. நம் மனமும் அழுக்கில்லாமல் ஆகவேண்டும். நம் நல்வழியில் நிறைவுபெற வேண்டும். அப்போதுதான் பிறருக்குச் சொல்ல யோக்யதை இருக்கும்.

● நமது மதமாகிய விருக்ஷத்துக்கு தர்மந்தான் வேர். பக்தியும் ஞானமும் அம்மதத்தின் புஷ்பமும் பழமும் ஆகும். வேர் உலர்ந்து நசித்துப் போகாமல் பார்த்துக்கொள்வது நம் எல்லாருடைய கடமையும் ஆகும்.

● உலகில் மாயையால் தோன்றும் அஸூயை பாபம்முதலியவை போய் கடைசியில் பரமேஸ்வரன் ஒருவரே நிற்பதுபோல் சாணமும் தன்னுடைய நிறம் வாசனைகளை விட்டுப் பரிசுத்தமான திருநீறு ஆகிவிடுகிறது. ஆகையால் விபூதி பரசிவஸ்வரூபம். ஸர்வமும் தன்னில் லயிக்கும்படி செய்யும் சிவன் தான் விபூதி.

● வாழ்க்கைக்கு ஓர் பொருளுண்டு; அதில் துன்பங்கள் பிரச்னைகள் ஆகிய அனைத்துசரும் இடமுண்டு என்று நாம் எண்ணிவோம். ஆனால் கஷ்டங்கள் நம்மைக் கலங்க வைக்க அனுமதிக்காமல நிதானத்துடன் சமாளிக்க முடியும்.

● சாதாரணமாக ஒருவர் தமது இருபதாவது வயது முதல் ஐம்பதாவது வயதுவரை இந்த முப்பதாண்டு காலத்தில் தாம் மென்று விழுங்கி உண்பதற்குச் செலவிடும் நேரம் சுமார் இருபதாயிரம் மணி. அதாவது இருபத்தெட்டு மாதம் இரவும் பகலும் தொடர்ந்து உண்ணும் நேரம்.

● தேக்கு சந்தனம் முதலிய ஜாதி மரங்கள் வெட்டப்பட்டாலும் சிறு துண்டுகளாக்கினாலும் மரம் என்றே பெயர் பெறும். அவற்றை விற்கின்ற இடம் மரக்கடை எனப்படும். அதுபோல் பெரியவர் எத்தனைச் சிறுமை வரினும் தமது நிலையினின்றும் மாற மாட்டார்கள். தமக்கு உதவி புரியாதவர்களிடத்திலும் கருணை காட்டுவர் மேன் மக்கள்.

● நிலப்பரப்பைக் காட்டிலும் கடல் பரப்பு மூன்று மடங்கு பெரிது. கடலுக்கு இடையே உலகம் அழியாமல் இருப்பதற்குக் காரணம் நல்லோர்கள் வாழ்வதேயாகும்.

● காசிக்கும் காஞ்சிக்கும் ஓர் எழுத்துத்தான் வித்தியாசம். இரண்டும் முக்தி க்ஷேத்திரங்கள். தென்னிந்தியர்கள் வடக்கே க்ஷேத்திராடனம் செல்லுகிறார்கள். வடக்கே உள்ளவர்கள் தெற்கே வருகிறார்கள்.

● எவ்வளவுக்கெவ்வளவு பெரிய மனிதர்களாக இருக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு பெரிய கஷ்டம் வரும். மாடியிலிருந்து விழுந்தால் கை, கால், மண்டை எல்லாம் நொறுங்கிப் போகும். திண்ணையிலிருந்து விழுந்தால் சிராய்ப்போடு நின்று விடுகிறது.

● ஓர் அழகியை நினைத்தால் காமம் வரும். துஷ்டனை நினைத்தால் பயமும் கோபமும் வரும். சுத்த ஸ்படிகமாக விளங்கும், பரமேச்வரனை நினைத்தால் நம்மனஸ் சுத்த ஸ்படிகமாகும் அவன்தான் எப்போதும் ஆனந்த ஸ்வரூபியாய் இருக்கிறான். தூக்கமில்லாதவனாக இருக்கிறான். அவனை நினைத்தால் ஆனந்தம் ஏற்படும்.

● ஆசார்ய பக்தி, குரு பக்தி எல்லாம் வைத்து கொண்டு, தினமும் ஒரு அனுஷ்டானத்தை வைத்துக் கொண்டு, விசேஷ நாளில் வாரத்தில் ஒரு நாளாவது அரை மணி முக்கால் மணி அதிகப்படியாக வைத்துக் கொள்ளும் அனுஷ்டானத்தை வைத்துக் கொண்டு வந்தால், ஈசுவரனுடைய கருணா கடாக்ஷம் ஏற்படும்.

● அம்பாளின் அருள் நமக்குத் தெரியாது. நமக்கேற்படும் நல்லதுக்கும், கெட்டதுக்கும் மூலம் அவளுடைய அருள்தான். நல்லது —காரணம் இல்லாத அருள். கஷ்டம்—ஒரு காரணத்திற்காக ஏற்படுகிற அருள். நல்லது வந்தாலும் கெட்டதுவந்தாலும்அவளது அருள் என்று கொள்ள வேண்டும்; நமக்குத் தெரியாது எதற்காக அதைக்கொடுக்கிறாள் என்று.

● ஒரு பறவை இரு சிறகுகளைக் கொண்டு பறப்பதுபோல் இறை வழிபாட்டுக்கு பூவும் நீரும்வேண்டும்.

● கோயில் ஐந்து பிரகாரங்களோடு கூடியது. இந்த உடம்பே இறைவன் இருக்கின்ற திருக்கோயில். இந்த உடம்பும் அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், ஆனந்த மய கோசம் விஞ்ஞானமய கோசம் என்ற பஞ்ச கோசங்களையுடையது.

● ஒரு காகிதத்திற்கு இரண்டு பக்கங்கள் இருப்பதுபோல் தெய்வத்திற்கும் இரண்டு பக்கங்கள் உண்டு. ஒன்று தட்பம் மற்றொன்று வெப்பம். வெப்பமும், தட்பமும் சமமாக இருந்தால்

தான் மலர் மலராக காட்சி அளிக்கும். வெப்பம் மிகுந்தால் மலர் வாடும். தட்பம் மிகுந்தால் மலர் அழுகும்.

● சமைக்கும்போது சோடாமாவைச் சேர்ப்பது உணவுகளிலுள்ள 'பி' வைட்டமின்களை அழித்துவிடும். ஆகவே சமைக்கும் போது சோடாமாவு சேர்க்கக் கூடாது.

● சீதபேதி, வயிற்றுப் போக்கு, மூலநோய், பித்தக்காய்ச்சல், இருமல், ஈளை நோய் ஆகியவைகளை குணப்படுத்தவெள்ளாட்டுப்பால் மிகச் சிறந்தது.

● சிவபெருமானுக்குத் தீபம் சமர்ப்பித்தலின் கருத்து, சித்சக்தியாகிய தீபம் ஆன்மாவினது மலத்தைப் போக்கி ஞானத்தை விளக்குதல் என்பதாம்.

● கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை தவம் அன்பு என்பவையே கடவுளுக்கு உகந்த மலர்கள் என்னும் பாவனையே அஷ்டபுஷ்பம் சாத்துதலின் கருத்து.

● தலை, செவி இரண்டு, கை இரண்டு, புஜங்களிரண்டு மோவாய்க்கட்டை, ஆகிய எட்டு அவயவங்களும் பூமியிற்படும்படி வணங்குவதற்கு அஷ்டாங்கநமஸ்காரம் எனப்படும்.

● தினசரி குளிப்பதால் தேகம் சுத்தம் அடைவது மட்டுமின்றிச் சரீரத்திற்கு ஆரோக்யமும் உண்டாகிறது. உற்சாகம் அதிகமாகிறது. மனம் பரிசுத்தமாவதற்கும், இந்திரிய அடக்கத்திற்கும் உதவுகிறது. பல நோய்கள் நீங்குகின்றன. பசி உண்டாகும்.

● நெல்லிச்சாறு அல்லது நீரில் கலந்த நெல்லிப் பொடியை சில நாட்கள் அருந்தி வர பசி நன்கு தோன்றும். நெல்லிப் பழங்களைத் தின்றால் உமிழ் நீர்ச் சுரப்பிகளில் அழுக்குகள் நீங்கி புத்துணர்வு அடையும் சுவையும் அதிகரிக்கும். பசியும் சுவையும் இயல்பானால் சீரணமும் எளிதாகும்.

● சில்லறைக்கடை வைத்திருப்பவர், உழைப்புக்கு ஏற்ற லாபத்தைப் பெறுவதற்குப் பாடுபடுவதைத் தம்முடைய குறிக்கோளாகக் கொள்ள வேண்டும். அடுத்தபடியாக அவர் பாங்கில் அதிகமான இருப்புக்களைச் சேமித்து வைத்துக்கொள்ள முற்படவேண்டும் ஒதுக்கி வைக்கப்பட அந்தச் சேமிப்புகளே சில சந்தர்ப்பங்களில் வியாபாரங்களைக் காப்பாற்றுகின்றன.

● நல்லது தீயது என்பதை செயலை மட்டும் வைத்துப் பார்த்து முடிவு கட்டக்கூடாது. இது நியாயம், அது அநியாயம் என்பது செயலில் மட்டும் அமைவதில்லை. என்ன கருத்தில் செய்யப்பட்டது என்பதை வைத்தே தீர்மானிக்கவேண்டும்.

# மணி மொழிகள்



மகாத்மா காந்திஜி

கடவுள் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் இருக்கிறார் அவர் அநுமதியின்றி எதுவும் நிகழ்வதில்லை. நமது பிரார்த்தனை உள்ளத்தைச் சோதனை செய்துகொள்ளும் ஒரு முறையே யாகும். கடவுளின் ஆதரவு இன்றேல் நாம் திக்கற்றவர்களாகிறோம் என்பதை நமக்குநாமே எப்பொழுதும் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

பிரார்த்தனை இல்லாமல், கடவுளின் அருள் இன்றேல் மானிடரின் எத்தகைய முயற்சியும் பலன் அற்றுப்போய்விடுகிறது. இதைத் திட்டமாக உணராவிடில் எத்தகைய முயற்சியும் பூரணமானது ஆகாது.

இந்துக்களுக்குக் கோயில்கள் இல்லையாயின் வாழ்க்கையிலேயே மகோன்னதமானதாகக் கருதும் ஒரு பொக்கிஷத்தை அவர்கள் இழந்தவர்களாகி விடுகிறார்கள். கோயில்கள் இந்து சமயத்தின் ஒரு முக்கியமான அம்சம் என்பதே என் உறுதியான கொள்கை.

கடவுள் ஒரு காலத்திலும் சக்தியற்றவராகி விடுவதில்லை, அவரது சட்டங்கள் மாற்ற முடியாதவை, நாம் அவற்றை அறியோம். குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் அவரது சித்தம் எப்படி இருக்குமோ என்பதையும் நாம் அறியோம். கடவுள் சித்தம் போலவே அனைத்தும் நடைபெறும். பிரார்த்தனை, கடவுள் சித்தம் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ளும்படி செய்கிறது.

ஆன்மா அழிவற்றது என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. இவ்விஷயத்தையொட்டி சமுத்திரத்தை உவமையாகக் கூற நான் விரும்புகிறேன். தண்ணீர்த் துளிகள் சேர்ந்தே சமுத்திரமாகின்றது. ஒவ்வொரு துளியும் தனி அம்சம். அப்படியிருந்தும் அது சமுத்திரத்தின் ஓர் அம்சமாகவும் இருக்கிறது. அதாவது ஒன்றாகவும் பலவாகவும் இருக்கிறது.

தற்போதைய என் உடலை நான் நம்புவது போலவே மறு பிறப்பிலும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது.

பிரார்த்தனைகளை திரும்பத் திரும்பச் செய்வதால் அற்புதமான பலன்கள் உண்டாகின்றன. நிலையின்றித் திரியும் மூளைக்குச் சாந்தி கொடுக்கக் கூடிய ஒரு சாதனமே ஜபமாலையாகும். பலமான உடலுக்கு டானிக்குகள் எப்படியோ அப்படியே பலவீனமான மனத்திற்கும் ஆன்மாவுக்கும் பிரதிக்ஞைகள் அவசியமாக இருக்கின்றன.

நமக்கு இரண்டு விரோதிகள் இருக்கிறார்கள். அவர்களிடமிருந்து நம்மை நாம் பாதுகாத்துக்கொள்ளவேண்டும். பொய் தூய்மையின்மை, இந்த இரண்டுமே நம்முடைய விரோதிகள். எல்லா விரதங்களையும் அனுசரிப்பதற்கு மனத்தூய்மை அவசியமாகிறது. பொய் சொல்வது மாத்திரம் பொய் அல்ல. குற்றம் செய்துவிட்டு மௌனமாக இருப்பதோ (அ) ஒருவரது மன நிலையை மறைப்பதோ கூடப் பொய்யே ஆகும்.

அஹிம்சை, மன நிலையை மாத்திரமல்லாமல் அதன் காரணமாக ஏற்படும் செயலையும் குறிப்பதாகும் பிறருக்கு இம்சை செய்யக் கூடாது என்பதே அஹிம்சையின் பொருளாகும்.

மனிதன் உடம்பு அவனை அடிமையாக்கும் ஒரு சாதனமாகவும் இருக்கிறது. அவனுக்கு விடுதலையளிக்கும் ஒரு சாதனமாகவும் இருக்கிறது. தாம் ஒரு லட்சப் பிரபுவாகிவிடவேண்டும் என்ற நோக்கத்துடன் விவசாயத்தில் ஈடுபடும் ஒருவர் அதை தம்மை அடிமையாக்கும் ஒரு சாதனமாக மாற்றிக்கொண்டு விடுகிறார். தமது ஜீவனத்திற்கு மாத்திரமே விவசாயத்தை உபயோகிப்போர் அதை தமக்கு விடுதலை அளிக்கும் ஒரு கருவியாகச் செய்து கொள்ளுகிறார்.

சத்தியத்தை நாடுவோர் பயத்தையெல்லாம் எதிர்த்து வெற்றிபெறவேண்டும். அரிச்சந்திரனைப்போல் சத்தியத்தை நிறைவேற்றுவதற்காக அவர் எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கவேண்டும். அரிச்சந்திரன் கதை நீதிக் கதையாக இருக்கலாம். அதில் உள்ள உண்மையை, சத்தியத்தை நாடும் ஒவ்வொருவரும் தம் அனுபவத்திலிருந்தே அறிந்துகொள்ளலாம். அந்தக் கதை சரித்திர உண்மையைப்போல அவ்வளவு பெருமையும் மதிப்பும் வாய்ந்ததாகும்.

தியாகத்தினாலும் தொண்டினாலுமே, இந்த உலகம் பாதுகாக்கப்பட்டு வருகிறது. கீதை கூறுவது போல், ஆண்டவன் ஜீவன்களைச் சிருஷ்டித்து, தியாகம் என்ற கடமையை அவர்கள் நிறைவேற்றவேண்டுமென்று விதித்துள்ளார்.

கடவுள் எனக்குக் கொடுத்திருப்பதைத் தவிர வேறு எவ்வித சக்தி

யும் எனக்கு இல்லை. உலகில் அஹிம்சை பரவும்படிச் செய்வதற்கான ஒரு தூய்மையான கருவியாக நான் இருக்கவேண்டும் என்பது கடவுளின் சித்தமாயின், அவர் எனக்கு சக்தியையளித்து வழியையும் காட்டுவார். மௌனமான பிரார்த்தனையே எனது மகத்தான ஆயுதமாகும். கடவுள் சித்தமின்றி எதுவும் நடைபெறாது. நிரந்தரமான, மாறுதலற்ற அவரது சட்டப்படியே எல்லாம் நடக்கும்.

இந்து மதமே எனது சமயமாகும். எனக்குத் தெரிந்த எல்லா சமயங்களிலும் உள்ள சிறந்த அம்சங்கள் இந்து சமயத்தில் இருக்கின்றன.

இந்தியப்பண்பாடு என்பது இந்தியாவுக்குச் சொந்தமானது. தன்னை இந்தியர் என்று கூறிக் கொள்ளும் ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும் இந்தப் பண்பாட்டைப் பொக்கிஷத்தைப்போல் பாதுகாக்கக் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

மறுபிறப்பு என்பது ஊகித்துக் கொள்ளவேண்டிய ஒரு விஷயம் அல்ல. ஆனால் அது உண்மையே என்பதை ஐரோப்பா அறிந்து கொண்டு வருகிறது என்று 40 ஆண்டுகளுக்கு முன் மாக்ஸ் முல்லர் கூறினார். அந்த உண்மையை அறிவுறுத்திய பெருமை முற்றிலும் ஹிந்து சமயத்திற்கே உரியது.

மனிதர்களுக்கு மட்டுமல்ல, கடவுளின் சிருஷ்டிகரமான எல்லாப் பிராணிகளுக்கும் மோட்சம் கிடைப்பது சாத்தியம் என்பதே ஹிந்து சமயத்தின் சித்தாந்தமாகும்.

ஆன்மிகத் துறையில் ஹிந்து சமயத்தின் இறுதி லட்சியம் மோட்சமேயாகும். அதாவது ஆன்மாவானது, எல்லாப் பொருள்களிலும் வியாபித்து எல்லையற்று விளங்கும் ஆன்மாவுடன் (கடவுளுடன்) ஐக்கியம்அடைந்து விடுவதே. தன்னலமறுப்பு, சகிப்புத் தன்மை முதலியனவும் ஹிந்து சமயத்தின் சிறப்பு அம்சங்களாகும்.



- இலங்கையில் உள்ள கதிர்காமம் முருகப்பெருமானின் குன்றுதோருடற்பதிகளில் இதவும் ஒன்று. ஆண்டுகளுக்கு ஒரு முறை மட்டுமே சந்நிதி திறந்து வைக்கப்படுகிறது. மற்றையகாலங்களில் திரைபோட்டுத்தான் பூசை நடத்துகிறார்கள்.
- சூரிய நமஸ்காரம் செய்யாமல் எதையும் உட்கொள்ளாதவர்கள்கூட அந்தப் பழக்கத்தை விட்டுக் காபி ஒட்டலில் ஐந்து மணிக்கே போய்க் காத்திருக்கிறார்கள். அந்த அளவு பழக்கத்திற்கு அடிமையாகி விடுகிறார்கள்.

● கலங்கிய நீரைத் தேற்றாங் கொட்டையால் தெளிய வைப்பது போல், இறைவனுடைய திருமந்திரத்தினால் உன் உள்ளம் தெளிவடையும், தெளிந்த உள்ளத்தில் இறைவனுடைய காட்சி தோன்றும்.

● ஒவ்வொரு வேளை உணவின் போதும் இரண்டு தேக்கரண்டி தேனைத் தொடர்ந்து அருந்தினால் ஒருக் தலைவலி வருவதே இல்லை. வலி ஏற்பட்டவுடனே ஒரு கரண்டி தேனை அருந்தினால் பத்திருபது நிமிடங்களுக்குள் வலி நின்றுவிடும். இல்லை என்றால் மீண்டும் ஒரு கரண்டி தேன் சாப்பிடலாம். அப்புறம் வலி வராது.

● தனக்கென்று வாழ்கிறவன் விலங்கு. பாதி தனக்காகவும், பாதி பிறருக்காகவும் வாழ்கிறவன் மனிதன். பிறருக்கென்றே வாழ்கிறவன் தேவன்.

● ஆசைவாழ்க்கை இருள் சூழ்ந்தது. அன்பு வாழ்க்கைஇன்பமயமானது. அருள் வாழ்க்கை ஒளி மயமானது.

● யாழ் வாசிக்கும் பாணராகிய அந்தகக் கவி வீரராகவ முதலியார், இலங்கை வேந்தனைப் பாடி மகிழ்வித்துப் பரிசில் பெற்றார். புலவருக்குச் சிறு நிலப் பகுதியை வழங்கினான் வேந்தன். அதுவே யாழ்ப்பாணம் என்னும் பெயரால் வழங்கி வருகிறது.



# உண்டேன்



ஸ்ரீ திருமுருக
கிருபானந்த வாரியார்
சுவாமிகள்

ஒரு சொல்லைச் சாமர்த்திய மாகவும், நகைச்சுவை படவும் சொல்வதில் ஒளவையார் சமான மில்லாதவர். அவருடைய பாடல் அமிழ்தினும் இனிமையாகத் தித் திக்கும்.

ஒளவையார் அக்காலத்தில் கால் நடையாகவே நடந்து பலப் பல அரசர்களையும், தனவந்தர் களையும் பார்த்து அவரவர்கட்கு அரிய அறவுரைகளைக்கூறி நல் வழிப்படுத்தி வந்தார்.

அவருடைய புகழ் எங்கெங்கும் பரவியிருந்தது. அவரை மூவேந் தரும் புகழ்ந்தார்கள்; பாராட்டி னார்கள்; மாவேந்தரும் மதித்தார் கள்.

ஒளவையாருடைய பாடல்கள் அளவற்ற பெருமையுடையதாகத் திகழ்ந்தன; அவரால் பாடப் பெறுவதைத் தங்கள் பெரும் பேறாக எண்ணினார்கள். அவரை அனைவரும் வரவேற்றுப் புகழ்ந்து உபசரித்தார்கள். எங்கும் அவருக் குப் பாராட்டுதலும் சீராட்டுத லும் இருந்தன. அம்மையார் ஆங் காங்கு தாம் கண்ட காட்சிகளை அழகாகவும் சுவையாகவும் பாடு வார்.

ஒரு சமயம் ஒளவையார் மது ரையில் பாண்டிய மன்னனுடைய திருமணத்திற்குச் சென்றனர். திருமண விழாவில் அளவிறந்த கூட்டம். வருவாரும் போவாரும் அதிகம்.

ஒளவையார் மிகவும் எளிமை யாக இருப்பவர். ஆடம்பரத்தை அறவே வெறுத்தவர். எளிமை யான உடை உடுத்திருந்த ஒளவையாரை, அரண்மனை காவ லாளர்கள் பிடித்து வெளியே தள்ளிவிட்டார்கள். அங்குள்ள எவரும் அவரை இன்னார் என்று அறிந்தார்கள் இல்லை. உடையால் அவருக்கு உள்ளே செல்ல வந்தது தடை!

உலகம் உடையின் உயர்வைக் கண்டு மதிக்கின்றது. உள்ளத்தின் உயர்வை உன்னுவதில்லை.

சிவபெருமான் தோலாடை யுடுப்பவர்.

திருமால் பட்டாடை யுடுப்பவர்.

பாற்கடல் என்ன செய்தது தெரியுமா? அதுகூட ஆடம்பரத்தை விரும்புகின்றது. தோலாடை யுடுக்கும் சிவனுருக்கு ஆலால விடத்தை அளித்தது.

பட்டாடை யுடுக்கும் பரந்தாமனுக்குத் தனது மகள் இலக்குமி தேவியை ஈந்தது.

ஆதலால் சிறந்த ஆடையில்லாதவர்கள் ஒரு பெரிய சபைக்குச் சென்றால், அவர்கள் எத்தனை தான் கற்றிருந்தாலும் அவர்களை அந்த அவையோர்கள் நன்கு மதிப்பதில்லை. இந்தக் கருத்தை நையாண்டிப் புலவர் நவில்கின்றார்.

மேலாடை இன்றிச் சபை
புகுந்தால் இந்த மேதினியோர்
நூலாயிரம் படித்தாலும்
என்றார்; நுவல் பாற்கடலோ
மாலாவனவரணி பொன்னுடை
கண்டு மகளைத் தந்ததே
ஆலாலம் ஈந்தது தோலாடை
சுற்றும் அரன் தனக்கே.

ஒருவன் திருமணவீடு, கோயில், அரசாங்க சபை, புகை வண்டி முதலிய இடங்கள் எங்கு சென்றாலும் நல்ல பகட்டான ஆடையாயிருந்தால் முதலிடம் பெறுகின்றான். இன்றேல் ஒதுக்கிடம் பெறுகின்றான்.

இது குறித்து இராமலிங்க அடிகளார் தம் பாடல்களில் பாடியுள்ளார்.

அழுக்குத்துணி யுடுத்திருந்தால் நேரில் பார்த்தும் பாராதவர்களைப்போல் உலகோர் இருப்பர்; ஒருவித உதவியும் புரியார். அந்தோ! பட்டு உடுத்திருந்தால் 'ஓ! வாருங்கள், என் அங்கேயே நிற்கின்றீர்கள்? சும்மா உள்ளே வாருங்கள், வாருங்கள்' என்று கூறி உபசரிப்பார்கள்.

சரிகைக் கரையிட்ட உயர்ந்த ஆடையை யுடுத்திருந்தால், பார்த்தவுடன், 'ஐயா! வணக்கம். தங்கள் பெயர் யாது? ஊர் எது? தங்களது வியாபாரம் என்ன? தங்கள் தாயார் யார்? தந்தை யார் யார்? தங்கள் குலம் என்ன? சிறிது சொல்லலாமா? நான் அறிந்துகொள்ள திருவாய் மலரலாமா?' என்றெல்லாம் சரமாரியாக, அடுக்கடுக்காகக் கேட்பார்கள். இத்தகைய ஈனர்களிடம் செல்லக்கூடாது.

நேரா அழுக்குத் துணியாகில்
உன்றனை நேரில் கண்டும்
பாரா தவரென நிற்பார்;
உடுத்தது பட்டெனிலோ
வாரா திருப்பதென் வாரும்
என்பார் இந்த வஞ்சகர்பால்

சேராது நன்னெஞ்சமே
ஒற்றியூரானைச் சேர் விரைந்தே.

இந்த வண்ணம் உலகம் ஆடைக்கு அதிக மதிப்புத் தருகின்றது. ஆடை அணிகலன்கள் முதலிய ஆடம்பரம் இன்றிய ஔவையாரைப் பாண்டிய மன்னனது திருமணப் பந்தரின் வாயிலில் பிடித்துத் தள்ளியதில் வியப்பு ஒன்றுமில்லையே! ஔவையார் மக்களின் மிகுதியில் அதிகமான அலைப்புண்டு, உள்ளே செல்ல முடியாமல் வாளாகத் திரும்பினார்.

பாவம்! மதுரையை விட்டே புறப்பட்டு விட்டார் ஔவையார். திருமண விழாவில் கலந்து மகிழவேண்டும், நல்லுணவு உண்டு, பாண்டியனிடம் பரிசு பெறவேண்டுமென்று சில புலவர்கள் வருகின்றார்கள்.

எதிரிலே வருகின்ற தமிழ் மூதாட்டியாகிய ஔவையாரைக் கண்டு, 'தமிழ்த்தாயே! பாண்டிய வேந்தருடைய திருமணம் வெகு சிறப்பாக நடக்கின்றதாமே? உயர்ந்த உணவுகள் படைக்கின்றார்களாமே? தாங்கள் இனிதுஉண்டீர்களா?' என்று வினவினார்கள்.

அப்போது ஔவையார் அந்தப் புலவர்களைப் பார்த்து, 'ஐயன்மீர்! உண்டேன்; உண்டேன்; உண்டேன்' என்று மூன்று முறை நீளமாகக் கூறினார்.

'என்ன அம்மா! மிக்க நீளமாக உண்டேன், உண்டேன், உண்டேன் என்று மும்முறை மொழிந்தீரே, உணவு நிரம்பப் பலமோ? நீரும் நிரம்ப உண்டீரோ?' என்றார்கள் புலவர்கள்.

'ஐயன்மீர்! தெளிந்த தமிழிலே வல்ல பாண்டிய மன்னருடைய மணத்தான திருமணத்திலே நான் உண்ட உயர்வை உரைக்க வேண்டுமா?

"நெருக்குண்டேன் தள்ளுண்டேன்'

'பசியால் சுருக்குண்டேன்'

'ஆனால் சோறு மட்டும் உண்டிலேன்'

என்றார் அம்மையார்.

இப்பொருள்கள் அடங்கிய அருமைப் பாடல் இதோ:

வண்டமிழைத் தேர்ந்த வழுதி
கலியாணத்
துண்ட பெருக்கம்
உரைக்கக்கேள்-அண்டி
நெருக்குண்டேன்
தள்ளுண்டேன் நீள்பசியினாலே
சுருக்குண்டேன்
சோறுண்டிலேன்.



# அன்பும் கருணையும்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

அன்பே சிவம்.

அன்பின் இயல்பும் சக்திகளும் மகத்தானவை, அளவு கடந்தவை விவரிக்க வொண்ணாதவை.

கலப்பற்ற — தூய்மையான — அன்பே ஜீவனை இறைவனுடன் பிணைக்க வல்லது. அது எத்தகைய வடிவத்தில் தோன்றினாலும் அதன் சக்தியாண்டும் பொலிந்தே நிற்கின்றன.

பிரதியுபகாரமோ நன்றியையோ எதிர்பாராதும் வரையாதும்கொடு. ஏனெனின்கொடுக்கும் தன்மையேதான் அன்பின் இயற்கை சொரூபமாகும்.

அன்பிற்கேதான் ஒப்பற்ற இணைக்கும் சக்தி உண்டு. அது ஒன்றே எல்லா சக்திகளைக் காட்டிலும் மிக்க வலிமை வாய்ந்தது. அதுவேபல்வேறு மதங்களிடையேயும் தேசங்களிடையேயும் ஒற்றுமையையும் வளர்க்க வல்லது. எனவே தூய்மையான — சுயநலமற்ற-தெய்விகமயமான அன்பை உன்னில் வளர்த்துக் கொள்.

வெறுப்புக்கு அழிக்கும் சக்தியே உண்டு; நன்மை பயக்கும் சக்தி கிடையாது. அதுயாண்டும் கேட்டையே விளைவிக்கும். ஆனால்,அன்போ யாவர்க்கும் நல்லவையே பயக்கும். அது ஒன்றுதான் மனப்புண்ணை ஆற்றி, ஆறுதலை அளித்து, அடைக்கலமும் தரவல்லது.

சுயநலக் கலப்பற்ற தூய்மையான அன்பே உனது குணக்கூறையும் தூய்மைப்படுத்தி மேன்மையாக்கவல்லது.

அன்பே வாழ்க்கையை தெய்விகமாக்குகின்றது. எனவே

பிரார்த்தனை-ஜபம்-மஹாபுருஷர்களுக்குப் பணிவிடை செய்தல் ஆகியவைகளின் மூலம் தூய்மையான அன்பை உன்னில் வளர்த்துக்கொள்.

கருணையே உயர்வான நற்குணம். குற்றம் பொருத்தலே மகத்தான சக்தி. ஆத்ம ஞானமே மேலாம் ஞானம்.

இடையருது — நாராயண பாவத்துடன் சேவை செய். அப்பொழுது கருணை உணர்ச்சி தாஞகவே உன்னில் வளரும்.

கருணையோ தாராள மனப்பான்மையோ இல்லாதவன் யாவராலும் வெறுக்கத்தக்கவனே.

மாமிசம் உண்பவனிடம் கருணை உணர்ச்சி எழாது; ஐக்கிய பாவமும் வலுக்காது.

கருணைதான் யாவருடைய இதயப் பூட்டையும் திறக்கவல்லது; பாபங்களினுல் அசுத்தப்பட்ட மனதைப் பரிசுத்தப்படுத்த வல்லது; தீவிரநாஸ்திகர்களின் கடின இதயத்தையும் மிருதுவாக்க வல்லது.

இடைவிடாது கருணையைக் கடைபிடித்து வந்தால் நீ மற்றவர்களுடன் ஒன்றித்து விடுவாய்; உனது ஆத்மனேதான் யாவரிலும் அதிஷ்டானமாகஇருப்பதையும் உணர்வாய்.

ஆன்மீக வாழ்க்கைக்கு முதல் தேவை அஞ்சாமையே. அதுவே ஆத்மனுடைய தன்மையுமாகும். அஞ்சுபவனுக்கு அமர நிலை இல்லை.

எத்தகைய ஆபத்துக்களையும் இன்னல்களையும் உறுதியுடனும் அமைதியுடனும் ஆண்மையுடனும் அஞ்சா நெஞ்சுடனும் சகிக்கும் தன்மை அல்லது மனே நிலையே தைரியமாகும்.

நன்னம்பிக்கை - நல்லறிவு - நல்லொழுக்கம் ஆகிய முக்கூட்டு நெறிகளே இறைவன் சன்னிதானத்திற்கு இட்டுச் செல்லும் ஒப்பற்ற மார்க்கம்.

நேர்மையேஒப்பற்ற நற்குணம். இதை உனது இதயமாகிய வயலில் பயிரிட்டால் பேரானந்தமாகிய விளைச்சலை அபரிமிதமாகப் பெறுவாய்.

மனே உறுதியாவது துக்கம்—துன்பம்—மனச்சோர்வு — ஏக்கம் முதலிய கஷ்டங்களைப் பொறுமையுடன் சகித்துக் கொள்ளும் மனே சக்தியாகும். இதுவே எத்தகைய ஆபத்துக்களையும் மனங்கலங்காது எதிர்த்து நிற்கும் சாத்வீகம் நிறைந்த வீரமுமாகும். இதுவே எதையும் எதிர்த்து நிற்கும் மனத்திண்மை அல்லது வலிமையுமாகும்.

மனே உறுதியாவது தைரியம்-மனவமைதி-பொறுமை - சமயோசித புத்தி-சகனசக்தி ஆகிய இவை யாவும் சேர்ந்த ஆத்மீக சக்தியாகும்.

மனோ உறுதி ஆபத்துக் காலங்களில் உதவும் உத்தம நண்பனை ஒத்ததாகும். இதுவே போஷிக்கும் தாயும், மனதிற்கு ஏற்ற சிறந்த ஔஷதமும் ஆகும். எனவே மனோ உறுதியை உன்னில் வளர்த்து வலுவாக்கிக் கொள்.

க்ஷமை மேலாம் தெய்வீக சம்பத்தாகும். இக்குணத்தில் பொறுமை, சகனசக்தி, குற்றம் பொறுத்தல், கருணை மனத்திண்மை, ஆகிய நற்குணங்கள் யாவும் அடங்கியுள்ளன. இக்குணத்தை அனுஷ்டிப்பவன் தன்னடக்கத்தையும் மனோ வலிமையையும் பெறுகின்றான், இக்குணத்திற்கு எடுத்துக் காட்டு ஏசுகிறிஸ்துவும் புத்தர் பெருமானும் ஆவர்.

---

# பொன் மொழிகள்



ஸ்ரீமத் ஸத்குரு
சாந்தானந்த ஸ்வாமிகள்

நீ வாழ்நாளெல்லாம் அனுஷ்டிக்க வேண்டிய மிகப் புனிதமான வ்ரதம் தான் தானகவே இருப்பதாகும். நீ பிறருனல் மலை மலையாய் உனக்கு துக்கம் மேலிட்டு வருமென்பதை மறவாதே.

நான்தான் என்கிற அஹங்காரம் உனக்குள் இருக்கும்வரை நீ ஆனந்தத்தைக் காணமுடியாது.

உலகில் எங்கும் கிடைக்காத மிகச் சிறந்த செல்வம் உன் உயிருக்கும் உயிராய் இருந்து வருவதை மறவாதே.

பக்தியின்றிச் செய்துவரும் வழிபாடுகள் முடிவில் துக்கத்தையே உண்டாக்கிவிடும்.

பாக்கியம் பாக்கிய மென்பதெல்லாம் எதுவென்று நினைத்தாய் அதுதான் குரு கடாக்ஷம். மறவாதே.

உன்னுடைய உள்ளத்துணிவு ஸன்மார்க்கத்தில் இருக்கவேண்டும்.

புண்ணியம் கஷ்டமாகத் தோன்றும்.

நட்பும் பகையும் நல்லவர்களுக்குக் கெடுதல் விளைவிக்கும்.

தன்னை அறியாதவனுக்குப் படிப்பு குங்குமம் சுமந்த கழுதையின் கதைபோல் முடியும்.

உனக்குள் இருக்கும் அந்தராத்மாவும் பரமாத்மாவும் ஒன்றேதான் என்பதை சொப்பனத்திலும் மறவாதிருப்பாயாகுக.

நீ உலகிலேயே மிகப்பெரிய ஸித்தனுகிவிட வேண்டுமானுல் உடன் சரணமடைந்துவிடு.

ஆணவத்துடன் கைங்கர்யம் செய்வதினுல் சித்த சுத்தி ஏற்படாது.

அசந்தையுள்ளவன் ஸதாகாலமும் துணிந்து பாவத்தைச் செய்து கொண்டிருப்பான்.

தன்னைத் தான் அறிவதில் உனக்குக் கவலையிருக்கட்டும்.

உண்மையான அன்பு இல்லாதவன் செல்லாத காசுக்கு சமானமாவான்.

அஹங்காரமாகிய விறகை அருட்ஜோதிக் கடவுளாகிய அக்னியில் கலந்துவிடு. நீ அழிவற்ற ஜோதி ஸ்வருபமாகிவிடுவாய், மறவாதே.

நீ சிவமாகிவிட வேண்டுமானுல் நான் சொல்வதைக் கேள். சங்கல்பம் செய்துவிடாதே. சங்கல்பத்தினுல் தான் உனக்கு இப்பிறவி வந்துள்ளது. அணுஅளவு சங்கல்பமும் செய்துவிடாதே நீ சிவமாகிவிடுவாய்.

கெட்ட எண்ணம் உன்னை இம்மையிலேயே கெடுக்கும். நல்ல எண்ணம் உன்னை இம்மையிலேயே மஹாபுருஷனுக ஆக்கிவிடும், மறவாதே.

உலகில் உள்ள ஜீவன்கள் அனைத்துள்ளும் கடவுள் ஒருவரே இருக்கிறுர். என் ஜீவன், உன் ஜீவன், என் கடவுள், உன் கடவுள் என்பது எல்லாம் அக்ஞானமாகும், மறவாதே.

இவ்வுலகைக் கடவுளாகவே நம்பிவிடு. கடவுள் இல்லை என்றுல் உலகமேது. கடவுளே உலகம் உலகமே கடவுள். நம்பிவிடு.

நீ இருக்கவேண்டிய இடம் கடவுள். மறவாதே.

கடவுள் உனக்குள் அந்தராத்மாவாயிருந்து கொண்டு உன்னைக் காவந்து செய்து வருவதை நீ மறந்துவிடாதே. உனக்குக் காவலான கடவுளை நீயே மாற்றமுடியாது. காவலன் சொன்னபடி கேள். காலன் கைக்குப்போகமாட்டாய்.

இம்மையில் தன்னை அறியாதவனுக்குப் பலகோடிப் பிறப்புகளிலும் உண்மையை அறியமுடியாது.

உனக்கு நல்ல வழிகாட்டி சாஸ்திரம் ஒன்றேயாகும், மறவாதே.

தன்னையே கடவுளுக்குக் கொடுத்துவிட்ட பக்தனிடம் அவனுக்கு என்று என்ன இருக்க முடியும்.

சக்தியே உலகில் பலகோடி கோடி ஜீவன்களாக தோற்றமளிக்கிறுள்.



# அருள் வாக்கு



ஸ்ரீ புவனேஸ்வரி பீடாதிபதி
ஸ்ரீ மௌன ஸ்வாமிஜி

காவேரியின் தீர்த்தம் பலவாறு கப் பயனபடுகிறது. அதேபோல யோகியருடைய வாக்கியம் பலருக்கு பல மாதிரியாகப் பயன்படுகிறதாக அறிந்து கொண்டவன் மனித லக்ஷணத்துக்குரியவன்.

தாஹசாந்திக்காக எத்தனையோ விதமான பானங்களை உபயோகித்தாலும், அவற்றில் நீர் இல்லாவிட்டால், தாஹம் அடங்காது. அதுபோல, ஸம்ஸார உலகத்தில் உழன்ற ஜீவனுக்குத் தாஹம் உண்டாகும்போது, எததனையோ விதமான மூர்த்திகளுடைய உபாஸனை இருந்தாலும், ஸச்சிதானந்த நீர் இல்லாவிட்டால் சாந்தி உண்டாதல் அரிது என்பதை உணரவேண்டும். ஆகையால், எப்பொழுதும் மனச்சாந்தி அடைவதற்கு அம்மூர்த்தியை உபாஸிக்கவும்.

ஒவ்வொரு ஜீவாத்மாவும் ஒவ்வோர் அவதாரமாக (விஷ்ணுவின் அம்சமாக)த் தன்னுள்ளத்தால் அறிந்தவனுடைய ஹிருதயத்தில் நிர்மலமாக பிரம்மம் பிரகாசிக்கிறது.

முதலில் சிறு குளங்களிலோ சிறு ஆறுகளிலோ நீந்திப் பழகின பிறகுதான், ஸமுத்திரத்தில் நீந்த முடியும். அதுபோல, சிறிது சிறிதாக அப்பியாஸங்களைச் செய்து திடவைராக்கியம் பெற்ற மனதுடையவனாகிய பிறகே, ஸச்சிதானந்தக் கடலில் மூழ்க முடியும்.

ஸ்நானத்திற்கு ஆற்றுக்கோ குளத்திற்கோ சென்றால், கங்கையையும் யமுனையையும் ஸரஸ்வதியையும் ஹரியையும் அழைத்துத் தான் நீராட வேண்டும். நான் அப்படிச் செய்ததினாலேயே ஹிமவத் கங்கையை ஸாக்ஷாத்தாகப் பார்த்து அதில் நீராடும் பேறு பெற்றேன். ஆகவே, ஒவ்வொருவரும் எந்த இடத்தில் ஸ்நானம் செய்தாலும், "கங்கை யமுனா, ஸரஸ்வதி, ஹரி! ஹரி!" என்று எண்ணி, அப்புண்ணிய தீர்த்தங்களில் நீராடிய பலனைப் பெற வேண்டும்.

கர்மம் பலவிதம் உண்டு. ஆனால், எதைச் செய்தால் ஈஸ்வர ஸந்நிதானத்தை அடையலாமோ அதை மட்டும் செய்து கொண்டிருப்பவன் கர்மங்களுடைய தாரதம்மியத்தை உணர்ந்தவனாகிறான்.

ஈஸ்வரனை அடையும் கர்மத்தையே புரிந்து கொண்டிருப்

பவன் அறிவொளி பெற்றவனுகிருன்.

கர்மம் அவ்வளவு சுலபமாகத் தொலைக்கக் கூடியதன்று. ஆழ்ந்த வேதாந்த விசாரத்தாலும் ஸத்ஸங்கத்தாலும் தன்னுள்ளத்திலெழும் பல துர்க்குணங்களையும் அடக்கி, பார்ப்பதையும் கேட்பதையும், மணப்பதையும், ஸ்பர்சிப்பதையும், ருசி பார்ப்பதையும் உள்முகம் திருப்பி மனத்தால் ஸங்கல்பிக்கப்பட்ட மூர்த்தியிடம் செலுத்தி, ஏகாக்ரசித்தத்தால் மனத்தை அறிந்ததும், கர்மாக்கள் நம்மைப்பற்ரு.

ஒருவன் கொடிய கர்மத்தைச் செய்துவிட்டுப் பொறுக்க முடியாமல் அவஸ்தைப்பட்டு உழல்வதைப் பகவான் பார்த்தாலுங்கூட 'அதுவும் நான்தானே' என்று சிரிப்பார்; அதை அடக்க முயல மாட்டார்; கர்மம் முடிவை அடைந்ததும், யாவற்றையும் தன்னுள் அடக்கிக் கொள்கிருர். ஆகவே, பகவத் தரிசனம் பெற முடியாவிட்டால், கர்மத்தைதீர்க்கவும் முடியாது என்பதை அறிக.

ஸ்ரீ ராம நாம ஜபத்தினுலே முதலில் மனத்தைக் கண்டு கொண்டு பிறகு இந்திரியங்களை அடக்கி கர்மத்தைச் சிறிது சிறிதாகப் போக்கி (உள்ளிப்பூண்டை உரித்துப் பருப்பை எடுப்பது போல) உள்ளில் புகுந்திருக்கும் ஆத்மாவை அறிய வேண்டும்.

குதிரைக்குக் கண்ணில் ஒரு பாகத்தை அடைத்தால்தான் அது நேர்ப் பார்வையாக வண்டியை இழுக்கிறது அதேபோல் விஷயங்களை நாலாபக்கமும் சிதற விடாமல் நேரான நோக்கத்திலேயே மனதைச் செலுத்தி, கர்மங்களைச் செய்ய வேண்டும்.

எப்பொழுது ஞானசூரியன் அந்தர் முகத்தில் தோன்றுமோ அப்பொழுதே இருள் நீங்கி, பரிசுத்த ஹ்ருதயத்தில் விசால ஆகாயம் தோன்றி அருணோதயமாகச் சோபிக்கிறது.

ஆத்ம ஞானிகளின் வாக்யமெல்லாம் ஒன்றுபோலவே யிருக்கும்! வார்த்தைகள் பல மாதிரி அனுபவ மொழிகளாயிருக்குமே ஒழிய, ஒரே ஸச்சிதாநந்தத்தையே கூறும்.

அன்பிற்கும் பகவான் கட்டுப்படவேண்டியவரே. ஒரு யோகி தம் அனுஷ்டானத்திற்குப் போகும் போது வழியில் வேறிடத்திலுள்ள அன்பினுல சிறிது நேரம் அங்கேயே இருக்கும்படி நேரிட்டது.

சிறிது நேரம் கழிந்ததும், பக்கத்து வீட்டார் தின பண்டங்களை அன்புடன் கொண்டு வந்தார்கள். பெரியார், "ஓ்ஹோ, இவையா நம்மை இங்கே நிறக வைத்தன? " என்று புன்சிரிப்புடன் அவைகளைப் பூஜித்தார். இதற்குக் காரணம் அவர்களுடைய அன்பே.

ஒரு கிராமத்தில் அந்தணர் ஒருவர் இருந்தார். அவர் எல்லாம் படித்தவர். யாராகிலும் தர்க்கம் செய்ய வந்தால் அநேக உதாரணங்களைக் காட்டிப் பேசுவதிலும்

ஸமர்த்தராயிருந்தார்; இன்னொருவரிடம் இருந்து கிரஹித்துக் கொள்வதிலும் ஸமர்த்தராயிருந்தார். அப்படியிருக்க, ஒரு ஸாது பிச்சைக்கு வந்தார். அவரிடமும் தர்க்கம் பேசி விட்டு, ஸாதுக்கு ஒன்றும் கொடுக்காமல் அனுப்பி விட்டார் இதைக் கண்டுகொண்டிருந்த பெரியார் ஒருவர் உள்ளம் துடித்தவராகி அவ்வந்தணரிடம் சொல்கிறார்.

"ஓ அந்தணா! நீ எல்லாம் படித்திருந்தும் படிக்காதவனேயாவாய்! ஏனென்றால், ஸாதுவின் பசிப்பிணியின் வருத்தத்தை உணராமலிருக்கிறாய்! உன்னுடைய படிப்பும் தர்க்கங்களும் வெளி வேஷமே! அனுபவத்தை உணர்வாயானால், ஸாதுவின் வருத்தத்தையும் உணர்வாயல்லவோ; உன் ஆத்மா வேறு, ஸாதுவின் ஆத்மா வேறு என்று இனியாகிலும் நினைக்காமல், படித்ததின் உண்மையை அறிந்துகொள்" என்றுஉரைத்துச் சென்றார்.

அதைக் கேட்டதும் அவ்வந்தணர் படித்தவராதலால் பல நூல்களில் இது கூறியிருப்பதையும் நினைத்து, பெரியார் உரைத்தது வாஸ்தவமே என்பதை உணர்ந்தார்.

'நமக்குள் இருப்பதைவிட ஆச்சரியமானது வேறெதுவுமில்லை' என்ற திடசித்தம் பெறுவதோடு உணர்வையும் வாராமல் காப்பாற்றிக் கொண்டு, அனுபவத்தைக் கண்டு ஆநந்திக்க வேண்டும்.



# சன்மார்க்க நெறி

வள்ளலார்

உலக உயிர்கள் அனைத்தும் ஒன்றுதான் என்ற கருத்திலே தெளிவுடையவர்கள், தம் உயிரைப் பாதுகாப்பதைப் போன்றே பிற உயிரையும் பாதுகாத்து ஒழுகுவர். தன்னலம் என்ற ஒன்றினை மட்டும் கொள்ளாமல் எல்லா உயிர்கட்கும் உரிமையுடைய பொது நலம் காண்பதையேவாழ்வாகக் கொண்டிருப்பவர். பிற உயிரின் நலன் பொருட்டு எதையும் செய்யத் துணிவர். இத்தகைய நிலையில் உள்ளவரே சன்மார்க்கராவர்.

சமயபேதம் கூடாது. சாதி பேதம் கூடாது. ஒழுக்க பேதம் கூடாது. உயிர் பேதம் கூடாது. உயிர்க் கொலை கூடாது. புலால் உண்ணல் கூடாது. பல்வகைத் தெய்வங்கள் கூடாது. பொய்யான சாத்திரம் கூடாது. கண்மூடிப்பழக்கங்கள்கூடாது. இவையே சன்மார்க்கம் போதிப்பவை.!

வஞ்சகர்தம் வார்த்தையைக் கேட்டு நடுங்காதீர்கள்! சன்மார்க்கத்தைத் தவிர வேறு ஒன்றையும். தேடாதீர்கள்! உலகிலுள்ள பொய்மைகளை நம்பாதீர்கள்.

மாநிலத்து மக்களே சேளுங்கள்: உலகிலுள்ள எல்லா நெறிகளும் ஒரே நெறியாகத்தான் போதிக்கின்றன. யான் கூறுவது பொய்யன்று; உண்மையாகும். ஆகையால் உங்கள் தூக்கத்தை விட்டுத் தொலையுங்கள்! உள்ளத்திலே துணிவு கொள்ளுங்கள்! கவலையைக் களைந்து விசுங்கள்! சன்மார்க்க சங்கத்தைச் சேருங்கள்! சத்தியமாகச் சொல்லுகின்றேன்! நீங்கள் அனைவரும் இப்பொழுதே நன்னெறியை அடைவீர்கள்!

சாத்திரங்களிற் சிறந்தது திருமூலரின் திருமந்திரம். இஃது மொத்தம் எண்ணாயிரம்: தோத்திரங்களிற் சிறந்தது திருவாசகம்; இவற்றை ஊன்றிப் பார்க்கவும்.

சுத்த சன்மார்க்கத்திற்கு முக்கியத் தடையாகிய சமயம், மதம் முதலிய மார்க்கங்களை முற்றும் பற்றறக் கைவிட்டவர்களும், காமக் குரோதம் முதலியவைகள் நேரிட்ட காலத்தில் ஞான அறிவினால் தடுத்துக் கொள்பவரும், கொலை, புலை தவிர்ந்தவர்களும் ஆகிய இவர்கள்தான் சுத்த சன்மார்க்கத்திற்கு உரியவர்களாவார்கள்.

சுத்த சன்மார்க்க இலட்சிய அனுபவ விருப்பமுடையவர்களுக்கு நினைவிலும் மண்ணாசை, கனவிலும் பெண்ணாசை, சுழுத்தியினும் பொன்னாசை முதலிய மூன்றும் கூடாவாம்!

சமரச வேத சன்மார்க்க சங்கம் என்பதற்குப் பொருள்: எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாகிய அறிவு நூல் முடிபான நான்காவது மார்க்கத்தை அனுஷ்டிக்கின்ற கூட்டமென்று கொள்க. மேற்படி மார்க்கம் நான்காவன: தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம்.

சுத்த சன்மார்க்கமாவது குண, நிர்க்குண வாச்சிய லட்சியார்த்தமாகிய சமய மதங்களினது அனுபமன்று. சுத்த சன்மார்க்கமென்பது சத சன்னமார்க்கமே யாம். சுத்தமென்பது ஒன்றுமில்லாதது. ஆதலால் சுத்தமென்பது சன்மார்க்கம் என்னும் சொல்லுக்கு முன் வந்தமையால், முன் சொன்ன சமய மதங்களைத்தாண்டினது, அதன் அனுபவங்களையும் கடந்தது.

மக்களெல்லாம் சமரச சுத்த சன்மார்க்க சங்கநதில் அங்கத்தினர்களாக வேண்டும்.

சாதி, சமய பேதங்களையெல்லாம் விடுத்து வடலூர்ச் சத்திய ஞான சபையில் நித்தமும் கூட்டு வழிபாடு நிகழ்த்த வேண்டும்;

ஜீவகாருண்ய ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து ஏழை மக்களின் பசி போக்க வேண்டும்;

தெய்வம் உண்டென்று நம்பி அதுவும் ஒன்றென்று தெளிந்து ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வுடன் உலகிலுள்ளோர் அனைவரும் ஒன்றுபட வேண்டும்.

எல்லாம் உடைய அருட்பெருஞ் சோதி அற்புதக் கடவுளே! இது தொடங்கி, எக்காலத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கியத் தடையாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்திற் பற்றாத வண்ணம் அருள் செய்தல் வேண்டும். சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லக்ஷியமாகிய ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமை எங்களுக்குள் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்துக்கும் எவ்வளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித்தருளல் வேண்டும்.

இப்பூவுலகில் உள்ள மாந்தர் வெறும் ஆடம்பரக்காரர்கள். இவர்கள் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுகின்றவர்கள். உள்ளத்தில் கருத்தவர்கள்; கறை படிந்தவர்கள்; குற்றங்கள் நிறை,

தவர்கள். புறவுலகில் வெள்ளை யாகக் காட்சியளிக்கும் வேடதாரி கள்.

இவ்வுலகில் போலிகளாக நடமாடும் அனைவரையும் திருத்திச் சன்மார்க்க சங்கத்தில் சேர்ப்பேன். இம்மண்ணுலகிலே மறுவலகம் — அதாவது பரலோகத்தில் உண்டென்று உரைக்கப்படும் நன்மைகளையெல்லாம் பெற்று மகிழ்வார்கள். இதைச் செய்வதற்காகவே நான் இவ்வுலகில் பிறந்திருக்கின்றேன். இதற்காகவே என்னை இந்த யுகத்திலே ஆண்டவன் படைத்தான். யானும் இந்த நோக்கத்துடனேயே அன்பையும் இரக்கத்தையும் துணையாகக் கொண்டு உழைக்கின்றேன்.

ஆதி, நடுவு, அந்தம் என்ற மூன்று மற்ற அழியாத இரக்கத்தோடு கூடிய பேரறிவு என் உள்ளத்தே புகுந்தது. அது நீதியோடு இணைந்து என் உள்ளமெல்லாம் நிரம்பி விட்டது. ஆதலால் நான் நித்தியமும் எல்லோர் உள்ளத்திலும் அழியாமல் இயங்குகின்றவனாக ஆனேன், உலகீரே! சாதிகள், சமயங்கள், அவற்றின் உட்பிரிவுகள் எல்லாவற்றிலிருந்தும் உங்களை விடுதலை செய்வேன். சங்கப் பெரு வீதியிலே உங்களை நடமாட வைப்பேன். இதுதான் இகத்தில் பரத்தைப் பெறும் மார்க்கம். நான் கூறுவது உண்மை உலகீரே! விரைந்து என்னிடம் வாருங்கள்.

பூவுலகில் உள்ள எல்லா உயிர்களும் என்னுடையஉயிரும் ஒன்றுதான். பிற உயிர்க்கும் என்உயிர்க்கும் எத்தகைய வேறுபாடும் இல்லை என்ற உண்மையை உணர்ந்து நினைத்து, எல்லா உயிர்கட்கும் இன்பம் உண்டாகும்படியான செயல்களையே நான் செய்ய வேண்டும்.

வறுமையில் வாடுவோர் அற்ற சிறந்த சமுதாயமாக மனித சமுதாயம் வாழ வேண்டும்.

சாதி, சமயம், இனம், நிறம், பாஷை, நாகரிகம் ஆகிய எந்த வகையிலும் பேதம் பாராட்டக் கூடாது. எல்லா உயிர்களையும் நம்முடைய உயிரைப் போலவே எண்ண வேண்டும். இது வெளி வேடமாக இருந்தால் எவ்விதப் பயனும் இல்லை.

உள்ளத்திலே இவ்வகையான ஒற்றுமை எண்ணம்அமைந்திருக்க வேண்டும். எல்லா உயிர்களோடும் உறவு கொண்டாடி உவப்படைய வேண்டும். இவ்விதமாகச் செய்கின்றவர் யாரோ அவருடைய மனந்தான் களங்கமற்ற அறிவு வடிவமாகும்.

அந்த அறிவால்தான் எம்பெருமான் அன்புருவில் நடம்புரிவான். அதுதான் அன்பு நடனம் புரியும் இடம்.

இவ்வுண்மையையான்உணர்ந்து விட்டேன் இத்தகை அறிவுடையவர்களின்பாதத்திற்குத்தொண்டு செய்யவே என் மனம் விரும்புகிறது. இத்தகைய மனிதத் தன்மையுடைய பேரறிவாளரைப் பின்பற்றித் தொண்டு புரியவே ஆசைப்படுகின்றேன்.

# வாழ்வின் தத்துவங்கள்



ஸ்ரீ சுவாமி சிதானந்தா

பூஜையுடன்செய்யும்சேவைக்கு மகத்துவம் இரு மடங்கு ஆகிறது. பறவைகளுக்கு இரண்டு இறக்கைகள் இருக்கின்றன. இரண்டு இறக்கைகள் இல்லாமல் பறக்க முடியாது.

அதைப் போலவே பூஜையினுலும் யாருக்காகிலும் சேவை செய்தல் இருக்கவேண்டும். அதுவே லாபம் தரும் பூஜையாக ஆகிறது. பூஜை வழிபாட்டுடன் டு ஞ்சொற்களை பிரயோகம் செய்ததால் அதன் பலன் க்ஷீணித்துப் போய்விடும்.

ஒரு நாள் நாம் எல்லோரும் இந்த உலகத்தை விட்டுப் போக வேண்டியதே கையை மூடிக் கொண்டு கொஞ்சம் கொண்டு வந்தோம், இங்கே உலக பந்தங்களில் சிக்கி மாயவலையில் விழுந்து எல்லாம் இழந்தோம்.

இப்பொழுது வெறுங் கையை விரித்துக்கொண்டு போய் விடுவோம். மனிதன் தன்னுடு எடுத்துக்கொண்டு போக விரும்பினுல் கொஞ்சம் சேர்த்துவைக்கவேண்டும். பணம்-காசு, கௌரவம் பெண்டு-பிள்ளைகள் யாரும் உடன் செல்வதில்லை.

அப்பொழுது எது கூட செல்கிறதோ அதற்கு முயற்சி செய்ய வேண்டும். சேவை, தியாகம், பஜனை, கீர்த்தனை, வழிபாடு, பக்தி இவைகளை யாரும் கொள்ளையடித்துச் செல்லமுடியாது. இதுவே சாசுவதமான செல்வமாகும்.

மனிதனுடைய வாழ்க்கையில் பிறந்த நாளுக்கு மகத்துவம் அதிகம். ஒவ்வொரு பிறந்த நாளும் நமக்கு நினைவூட்டுகிறது. நமது

விளைமதிக்க முடியாத வயது குறைந்துக் கொண்டே போகி றது.

ஆகையால் நாம் எந்த ஒரு பெரிய குறிக்கோளுக்காக பிறந் திருக்கிறோமோ அதைப் பூர்த்தி செய்வதற்கு முயற்சி உள்ளவர் களாக இருப்போமாக. பிறந்த நாள் மனிதனுக்கு பொன் மய மான வாயிற்படியை திறக்கிறது. அதிலே பிரவேசித்து அவன் தன் னையும் தன்னை உருவாக்கிய பிர மனையும், அந்த பரம் பொருளை யும் தெரிந்துக்கொள்ள முடி கிறது.

பணிவாக இரு. ஒழுக்கமாக இரு. அகங்காரத்தை விட்டொழி சத்தியம் பேசு. குற்றம் காணு வதை ஒழித்துக்கட்டு. நாம ரூபங் களைத் தியாகம் செய். தத்துவத் தைத் தெரிந்துக்கொள்,

அவன் நித்திய சுத்தனாகவும், எங்கும் சர்வ சக்திமானாகவும், பிறப்பு இறப்பு இல்லாதவனாக வும், அசலனாகவும், அசேஷமாக வும், அனந்தனாகவும் பூரணனாக வும் இருக்கிறான். அவனையே சிந் தித்துவா. பார்வையை மாற்று. நீ ஆத்ம சாக்ஷாத்காரம் பெற்று விடுவாய்.

சாதகனுடைய வாழ்வில் கட் டுப் பாட்டிற்கு பெரிய மகத்துவம் இருக்கிறது. ஆபத்துக் காலத்தி லும் கூட முறைப்படியான காரி யத்தை அவசியம் செய்யவேண் டும். கொஞ்ச காலமானாலும் சரி அல்லது சிறிதளவாகிலும் சரி, செய்யவேண்டும்.

சாதனையில் முறைப்படி அப்பி யாசமும் உறுதியும் இன்றியமை யாதது. சாதனையில் முறையில்லா மல் போனால் மனம் சஞ்சல மடைகிறது மனக் கட்டுப்பாடு இல்லாமல்போனால்சாதனை நடை பெறாது. முறைப்படியான கட்டுப் பாடு இந்திரியங்களைக் கட்டுப் படுத்த உதவுகிறது.

வேதாந்த வாழ்வின் உண்மை யான சித்தாந்தங்கள், (கொள் கைகள்) மாறுபடாதவைகள். பல தரப்பட்ட சாது, சன்னியாசிகள், மகாத்மாக்கள், தவசிரேஷ்டர் கள். மகா புருஷர்கள். அநேக மொழிகளில் பலதரப்பட்ட வாக் கிய ரூபங்களில் வெளிப்படுத்தி யிருக்கிறார்கள்.

நாம் ஆழமாக சிந்தித்துப் பார்த்தால் சமத்துவம் இருப்ப தைக் காணலாம். நாம் நம் முடைய வெளிப்பார்வையால், மொழி என்ற வலையில் சிக்கி அவைகளில் வித்தியாசத்தைஉண் டாக்கிக் கொள்கிறோம். நுண் ணிய அறிவோடு பார்ப்போமே யானால் அவைகளில் எந்த ஒரு வித்தியாசமும் காண முடிவ தில்லை.

தன் மோசமான, கீழ்த்தர மான தன்மைகளுடன் ஒரு முகப் படுத்திக் கொள்ளவேண்டும் என்ற எண்ணமே எல்லாவற்றை யும் விட பெரிய பந்தத்திற்கும்

துன்பத்திற்கும் காரணமாக அமைகிறது.

அதுவே மனிதனுடைய எல்லா வித துன்பங்கள், அதிருப்தி, விரோதம் மேலும் போட்டிக்கும் காரணமாக அமைகிறது.

மனம் மிகவும் சஞ்சலமானது. அது ஒரு விநாடி கூட எங்கேயும் நிற்பதில்லை. உட்காருவதில்லை. ஒரு வினாடிப் பொழுதில் நூற்றுக் கணக்கான மைல்களைச் சுற்றி வந்துவிடுகிறது. மனம் நாம் இருக்கும் இடத்தில் இல்லாமல் நம்மைவிட்டு தூரமாக இருக்கிறது.

நாம் நம்முடைய இந்த மனதை எப்பொழுதும் நம்மிடமே வைத்துக்கொள்ள முடிந்தால், நாம் எங்கே உட்கார்ந்து இருக்கிறோமோ, எங்கே வசிக்கிறோமா, எங்கே வேலை செய்கிறோமோ, அங்கே எல்லாம் இந்த மனதை கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ள அப்பியாசம் செய்துக் கொள்ளுவோமேயானுல் நிச்சயமாக ஆத்ம சாந்தி பெற முடியும்.

மனிதனிடம் எவ்வளவு புலமை இருக்கிறது, புத்தி, விவேகம் இருக்கிறது என்பதை நிர்ணயிக்க அவனுடைய நடத்தையால் தெரிந்துக்கொள்ளலாம். இதை மனிதன் நல்ல முறையில் உபயோகப்படுத்தாவிட்டால் கிடைத்து இருந்தும் வீணே.

தூய்மையான எண்ணங்களுக்கு எதிரில் மாசு படிந்த எண்ணங்களை அர்ப்பணம் செய்துவிட்ட போதுதான் மனிதனுடைய வாழ்வு தூய்மை அடைகிறது.

பங்களாவிலும் அறைகளிலும், எவ்வளவு கம்பிவலைகள் பொருத்தப்பட்டிருக்கின்றன. பல்புகள் பொருத்தப்பட்டு இருக்கின்றன. மின்சாரம் இல்லாமல் ஒளி, ஒரு பொழுதும் கிடைக்க முடியாது.

இதே மாதிரியாக உயிர் இல்லாமல் போனுல் இந்த உடல் வீண்; மண். யார் இந்த உடலுக்குஉயிர் கொடுத்து இருக்கிருரோ அவரை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். அவரே நமக்குத் தந்தை, தாய்.

நமக்கு கிடைத்து இருக்கும் அனைத்தும் அந்தப் பரம் பொருளின் வரப் பிரசாதமாகும். அந்தப் பரம் பொருளை மறதியாகக் கூட நாங்கள் நினைத்துப் பார்ப்பதில்லை. அவர் எங்களைமறதியாகக் கூட மறப்பதில்லை.

---

பேய் பிடித்திருக்கும் ஒருவனுக்குத் தனக்குப் பேய் பிடித்திருக்கிறதென்ற உணர்ச்சி வருமானுல், உடனே அப் பேய் அவனை விட்டகலுகின்றது. இதுபோல, மாயையால் பந்தப்பட்ட ஜீவன், தான் அப்படிப் பந்தப்பட்டிருப்பதைத் தெரிந்து கொண்டவுடனே மாயையினின்றும் விடுபடும்.

— சுவாமி இராமகிருஷ்ணர்

# திருமண் இட்டுக்கொள்ளுங்கள்

இளைஞர்களுக்கு வேண்டுகோள்

( ஓர் உண்மை வைஷ்ணவர் கதறுகிறார் )

*ஸ்ரீவைஷ்ணவ இளைஞர்களே !
விழிப்படையுங்கள் ! திருந்தி நல்வழிப் படுங்கள் !*

ஸ்ரீ வைஷ்ணவ இளைஞர்களில் பலர் இன்று திருமண்காப்புத் தரிப்பதை அவசியமற்றதாகவும் அவமானகரமாகவும் கருதுவதை எண்ணி, பெரியோர்கள் மனம் புழுங்கிக் கலங்குவதை நீங்கள் அறிவீர்களா ?

அது மட்டுமா ? நம் பெரியோர்கள் காதால் கேட்டாலே அருவருப்படையும் — மனத்தால் நினைப்பதற்கே கூசும் பதார்த்தங்களை நம் இளைஞர்களில் சிலர் ஸர்வஸஹஜமாகச் சாப்பிடுவதாக இதர மதஸ்தர்கள் கூடக் கேலி செய்கிறார்களே ! அது உங்கள் காதில் விழவில்லையா?

இதெல்லாம் சேரத்தகாத சேர்க்கையாலும் தவறான புதுமைக் கவர்ச்சியாலும் ஏற்பட்ட விளைவுகள்.

அத்தகைய கெட்ட பழக்கங்களைக் கைவிட்டு நம் பெரியோர் வகுத்துள்ள — மிக எளிதில் அனுஷ்டிக்கக் கூடிய ஆசார அனுஷ்டானங்களை இனியாவது பின்பற்ற வேண்டியது அவசியம்.

நெற்றிக்குத் திருமண் இட்டுக் கொள்வது என்பது ஸாதாரணமாக எல்லோருக்கும் கிடைக்கக் கூடியதா? ஸாக்ஷாத் பகவானின் திருவடியையே நாம் நெற்றியில் தரிக்கிறோம். இங்ஙனம் செய்வது ஸ்ரீ வைஷ்ணவர்களின் பிறப்புரிமையாகும். கிடைத்தற்கரிய பெருமையை யாராவது கைவிடுவார்களா ?

தினந்தோறும் நெற்றிக்குத் திருமண் பளிச்சென்று அணிந்து கொண்டு, ஸந்தியாவந்தனம் முதலியவைகளை வேளை தவறாமல் லகுவான முறையிலேனும் சிரத்தையுடன் செய்து வந்து, அவகாசம் கிடைக்க போதெல்லாம் பகவந் நாமாக்களையும் ஸ்தோத்ரங்களையும் பக்தியுடன் சொல்லி வந்தால் போதும். ஸகல ச்ரேயஸ்ஸுகளையும் அடையலாம்.

அப்படிச் செய்யாமல் நெற்றிக்குத் திருமண்காப்பு அணிய மறந்து எளிதான நம் ஆசார அனுஷ்டானங்களை உதாஸீனம

செய்தால் பாழ் நரகத்தில் வீழ்வதுடன் மீண்டும் மீண்டும் கஷ்டம் நிறைந்த பூமியில் ஜென்மமெடுத்து உழல வேண்டியது தான்.

நீங்கள் இந்த உதாரணத்தைச் சற்று கவனியுங்கள். ஒரு மாணவன் கல்லூரியில் M. A. பாஸ் செய்து விட்டான். அவன் புத்திசாலியாக இருந்தால் அடுத்துச் செய்ய வேண்டியது என்ன? ஆராய்ச்சிகள் செய்து டாக்டர் பட்டம் வாங்கி மேல் நாட்டுக்குச் சென்று படித்து உயர்ந்த பட்டங்கள் வாங்கிப் பெரிய பதவியில் அமர்வதைத் தான் விரும்புவான்.

P. U. C. வகுப்பில் சேர்ந்து, பிறகு S. S. L. C. வகுப்புககுப் போய், பிறகு படிப்படியாக நர்ஸரி வகுப்புககுப் போவதை விரும்புவானு? ஆனுல, நம் இளைஞர்களில் சிலருடைய செய்கை அதைப்போலததான் இருக்கிறது.

ஏனெனில், இப்போது எடுத்திருககும் இந்த ஜென்மததில சில எளிதான தாமஙகளையும் அனுஷ்டானங்களையும் கடைப்பிடிதமதாழுகினுல், இந்த ஜென்மம முடிந்ததும் மறு பிறப்பறற மோக்ஷானநதம் கிடைக்கும். அப்படிச் செய்யாமல் மனம் போன போக்கில் நடந்து கொண்டே போனுல் ஒவ்வொரு ஜென்மத்திலும் முன் ஜென்மத்தைவிடத் தாழ்ந்த பிறவி எடுத்துக் கடைசியாகப் புழுவாகத்தான் பிறக்க நேரும்.

எனவே ஸ்ரீவைஷ்ணவக் குழந்தைகளே! இன்று முதலாவது திருமண்காப்பு அணிவதைப் பழக்கமாகக் கொள்ளுங்கள். அது மட்டுமல்ல, ஸமாச்ரயணம் ஆனவர்களாயிருந்தால் ஏகாதசி முதலிய விரத தினங்களிலும், ஆவணி அவிட்டம், ஸ்ரீராம நவமி ஸ்ரீக்ருஷ்ண ஜயந்தி முதலிய பண்டிகை தினங்களிலும் பன்னிரண்டு திருமண் அணிந்து சுருக்கமான முறையிலாவது பகவானுக்குத் திருவாராதனம் செய்யுங்கள். எந்த வஸ்துவை உண்டாலும், உபயோகப்படுத்தினுலும் அங்ஙனம் செய்வதற்கு முன் அதை மானஸிகமாகவாவது பகவானுக்கு அர்ப்பணம் செய்யுங்கள்.

கல்வியறிவி அதிகரிக்கவும் செல்வங்கள் எல்லாம் மேலும் மேலும் வளரவும், எவ்விதக் கஷ்டங்களையும் போக்கவும் செய்யக்கூடிய சக்தி திவ்வியப் பிரபந்தங்களையும் பல ஸ்தோத்தரங்களையும் நம் ஆழ்வாராசார்யர்கள் அருளிச் செய்திருக்கிறுர்கள். அவைகளைப் பெரியோர்களிடம்அர்த்தத்துடன் கேட்டறிந்து ஒருபாசுரம் அலலது, ஒரு சுலோகத்தையாவது தினந்தோறும் அனுஸந்தித்து வாருங்கள், உங்களுககு எல்லா நன்மைகளும் உண்டாகும்.

எல்லாவற்றிற்கும் ஜேஷ்த்ரமாக, சாப்பிடக்கூடாத பதார்த்தங்களைச் சாப்பிடாதீர்கள். தூய்மையான வெள்ளை வேஷ்டிக்குப் பதில் கைலி அணிவதை அழகென்று நினைக்காதீர்கள். இது மிக மிக இழிவான போக்காகும்.

சுருங்கக் கூறின், ஸ்ரீபகவத் ராமாநுஜருடைய திருவடியை ஆச்ரயித்த நீங்கள் ஸ்ரீவைஷ்ணவ மதம் சீர்குலைவதற்குக் காரணமாயிருந்தவர்கள் என்று நிந்திக்கத்தக்க வகையில் தாழ்வான காரியம் எதிலும் ஈடுபடாதீர்கள் என்று உங்களை வேண்டிக் கேட்டுக் கொள்கிறோம். குலப்பெருமை, குடிப்பெருமை ஆகியவற்றைப் பேணிப் பாதுகாப்பதுதான் நாம் பிறவி பெற்றதற்குப் பயனும் பெருமையுமாகும். இந்த உண்மையை என்றைக்கும் மறக்காதீர்கள்!

—லிப்கோ பதிப்பகத்தார்





# ஆலய வழிபாடு

திரு. மு. இரத்தினதேசிகர்

இறைவன் "அங்கிங்கு எனாத படி எங்கும் பிரகாசமாய்—ஆனந்த நிறைவாகி" இருப்பவன். வேத சிவ ஆகமங்கள், சச்சிதானந்த நிலையே இறைவனின் முடிந்த நிலை என்று கூறுகின்றன, சத்து-என்றைக்கும் உள்ளது. சித்து-பேரறிவாய்த் திகழ்வது, ஆனந்தம்—பேரின்பமாய் இருப்பது.

இந்த மூன்றும் ஒன்றாய்த் திகழும் இறைவனின் அதீத நிலையை அறிவால் உணரலாமேயன்றி ஊனக்கண்ணால் காணமுடியாது. இது தான் இறைவனின் அருவ நிலை. உண்மை உணர்ந்த மெய்ஞ் ஞானிகளின் உள்ளத்தால் தான் இந்த நிலையை உணரமுடியும்.

இப்படி அருவ நிலையில் உள்ள ஆண்டவனை நம் போன்ற சகல ஆன்மாக்கள் உணர்ந்து உய்யவே அவன் அருஉருவத் திருமேனியாகிய இலிங்கவடிவில் இருந்து அருள் பாலிக்கிறான்.

இறைவன் எங்கும் இருப்பினும் "பசுவின் வடிவமெல்லாம் உள்ள பால், அதன் மடியின் வழியாக வருதல் போல ஆலயத்திலுள்ள இலிங்கத்தின் வழியாகவே வெளிப்படுகிறான்" என்பது சாத்திர உண்மை.

மேலும் நம்மிடத்து அவன் வைத்த எளிவந்தவான் கருணையால் சதுர்புஜம், மான்—மழு—காளகண்டம் ஆகியவற்றுடன் உருவத்திருமேனியாகவும் வந்து நமது கரு மூலத்தைக் கழிக்கின்றான்.

மாணிக்க வாசகருக்குத் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் மானிடச்சட்டை தாங்கி அமர்ந்து அருளுபதேசம் செய்ததும், அந்த உருவத்திருமேனியின் ஒரு நிலையே ஆகும்.

இம்மூன்று நிலைகளில் உள்ள இறைவனை ஆலயங்களில், அருஉருவநிலையாகிய இலிங்கவடிவிலும், உருவ நிலையாகிய, சோமாஸ்கந்தர் முதலிய உருவ பேதங்களிலும் வைத்து வழிபடுவது அருவநிலையில் உள்ள ஆண்டவனை அடைவதற்கு உரிய வழியாகும்.

இந்த தத்துவத்தை உணராமல் தான் இன்று, வடவருள் சிலரும் வேற்றுச் சமயத்தாரும் உருவ வழிபாட்டினை இழித்துப் பேசுகின்றனர். இறைவனுடைய உண்மை நிலையை அறிய விழைவோர் ஆலய வழிபாட்டினைக் கைக்கொள்ளவேண்டும்.

திருநாவுக்கரசர் போன்ற பரம ஞானிகள் இந்த ஆலய வழிபாட்டினைப் புறத்தே செய்ததன்றி உடம்பையே ஆலயமாகக்கொண்டும் இறைவனை வழிபட்டுள்ளனர். இதைச் சாத்திரம் அகப் பூசை என்று கூறும். அப்பமூர்த்திகள் திருநேரிசை ஒன்றில் இந்த அகப் பூசையைக் குறிப்பிடுகிறார்கள்.

"காயமே கோயில் ஆகக்
கடிமனம் அடிமை ஆக
வாய்மையே தூய்மை ஆக
மனமணி இலிங்கம் ஆக
நேயமே நெய்யும் பாலா
நிறைய நீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக்
காட்டினோமே"

என்பது அத்தமிழ்மறை. இதன் பொருள் 'உடம்பைக் கோயிலாகவும், விரைந்து பற்றும் மனத்தை அடிமையாகவும், உண்மை நிலையை உணர்வதே பரிசுத்தமாகவும், ஆன்மாவை இலிங்கமாகவும் அன்பையே நெய், பாலாகவும் கொண்டு நிறைய அபிஷேகம் செய்து ஈசனுக்கு அகப்பூசை செய்ய இங்கே கூறினோம்" என்பது.

உயிரை இறைவனாகக் கருதும் நிலை சோகம் பாவனையைக் குறிக்கும். இதனைத்தான் திருமூலரும் "தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்" என்றார். சோகம் பாவனை என்பது, மனத்தால் அந்தப்பரம் பொருள் நான் ஆனேன் என்று கருதுவதாகும்.

கருட தியானம் செய்பவன் தானே கருடனாக மாறுவதால் அவன் முன் உள்ள பாம்புவிடம் மறைகிறது, அதுபோல ஆன்மா அதுவாக நான் ஆனேன் என்று கருதுவதால் ஆன்ம ரூபம் அற்றுச் சித்தாத்துவித முத்திநிலையில் சிவமாந்தன்மையை அடைகிறது. இதனைத்தான் மாணிக்கவாசகப் பெருந்தகையாரும் "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

ஆ என்ற சொல்லிற்கு உயிர் என்பது பொருள். இலயம் என்ற சொல் இறைவனோடு ஒன்றுபடுதல் என்று பொருள்படும். எனவே உயிர் இறைவனை அடையச் சாதனமாக இருப்பதே ஆலயம். ஆலயங்களை அமைக்கும் முறைகளைப்

பற்றியும், ஆலயங்களுக்குக் குட முழுக்கு (கும்பாபிஷேகம்) நிகழ்த்துவது குறித்தும், நாட் பூசனை முறைகளைச் செய்வது குறித்தும் சிவாகமங்கள் தெளிவாகக்கூறும்.

சிவன் முத்தி நிலையை அடைந்தவர்கள் கூட வாசன மலம் தம்மைத் தாக்காதிருப்பதற்கு, ஆலயத்தை அரன் என்றே கருதி வழிபடவேண்டும் என்று சாத்திரம் கூறுகின்றது. எனவே நாம் உய்தி பெறுவதற்கு ஆலய வழிபாடு சிறந்த சாதனம் ஆகும்.

ஆலயங்களுக்குச் செல்வோர், நீராடித் திருநீறணிந்து, தூய உடை உடுத்திச் செல்லவேண்டும். தூய சிந்தனையுடன் செல்லவேண்டும். தொலைவில் செல்லும் பொழுதே தூல இலிங்கமாகிய கோபுரத்தை வணங்கவேண்டும். ஆலயத்தின் உள் சென்றவுடன் விநாயகரை வணங்கித் தமதுவழிபாடு இடையூறின்றி நிறைவேற வேண்டுமென்று வேண்டிக் கொண்டு தலையில் குட்டிக் கொண்டு கைகளை மாற்றிக் காதுகளை பிடித்துக்கொண்டு தோப்புக் கரணம் இடவேண்டும்.

பின்னர்ப் பலி பீடத்தின் அருகே நின்று தமது மன மாசுகளை அங்கே அகற்றி ஆன்மாவைத்தூய்மைப்படுத்திக்கொள்ள வேண்டும். நந்தியின் குறுக்கே செல்லாமல் இறைவன் சந்நிதியை அடைந்து தலையாரக் கும்பிட்டுக் குழைந்து பாடி வணங்க வேண்டும்.

அருச்சனை புரிதல், விலக்கிடுதல் போன்ற சிவப் பணிகளை விரும்பிச் செய்தல் நன்று. பிறகு மும்முறை வலம் வருவதல் வேண்டும். திருச்சுற்றில் வீற்றிருக்கும் அறுபான் மும்மை நாயன்மார்கள், முருகப் பெருமான், நவக்கிரகங்கள் ஆகியோரை வழிபடுதல் வேண்டும். மூன்றுவது சுற்றில் தக்ஷிணாமூர்த்தியின் முன் அமர்ந்து திருவைந்தெழுத்தை நூற்றெட்டு முறை உச்சரிக்கவேண்டும்.

இறுதியில் சண்டிகேஸ்வரர் சந்நிதியை அடைந்து வணங்கி சிவ தரிசனத்தின் பலனைப் பெறுதல் வேண்டும். அங்கே கை தட்டுதல் மரபு. சண்டிகேஸ்வரர் சிவாலய பரிபாலகராதலின் ஆலய உடைமைகளை நாம் கைக்கொள்ள வில்லை என்பதைக் காட்டவே கை தட்டுதல் வேண்டும்.

அம்பிகையின் சந்நிதியிலும் இப்படியே வழிபடவேண்டும். பிறகு வெளிப்போந்து எல்லா அங்கங்களும் தரையில் படும்படி வணங்கி, அமர்ந்து, மனத்தை ஒரு வழி நிறுத்தி, தியானம் செய்து விடு திரும்புதல் வேண்டும். வழிபாடு செய்யும்பொழுது பக்கத்தில் வருவோருடன் வெறும் பேச்சுககளைப் பேசிக்கொண்டு செல்லக் கூடாது.

கோயிலின் எந்த இடத்திலும் அசுத்தம் செய்யக் கூடாது. முடிநதவர்கள் உழவாரப் பணி புரிதல் போன்ற தொண்டுகளைச் செய்தல் நன்று. பூப்பறித்தல், மாலை கட்டுதல ஆதிய சரியைத் தொண்டுகளைச் செய்தல் மிகவும் நன்று.

# பக்தியில் தாய்மை

திருமதி சுசீலா சுந்தரவேலு

கடவுள் எல்லா இடத்திலும் ஒரே சமயத்தில் தான் இருக்க முடியாது என்றுதான் தாயைப் படைத்தார் என்று நம் முன்னோர்கள் விஷயமறிந்து சொல்வார்கள். இதையே மிகவும் அழகாக விவேகானந்தர், தன் அமெரிக்க சுற்றுப் பயணத்தின்போது, கலிபோர்னியாவில் ஆற்றிய பிரசங்கத்தில், இந்திய மாதரின் நிலையைப்பற்றி விரிவாகக் கூறியுள்ளதில், "இந்தியாவின் இலட்சியப் பெண்மணி தாய். அன்னையே முன்னறி தெய்வம் அறுதியாக அறியப்படுவதும் அன்னையே. பெண்ணென்ற சொல் இந்தியனுக்கு எண்ணத்திலே தாய்மையை நினைவூட்டுகிறது. ஆண்டவனையே இந்தியர்கள் தாய் என்று பாவனை பண்ணியே வணங்குகிறார்கள்." என்று கூறியுள்ளார்.

அதுபோலவே நம் நாட்டின் பண்டைய மரபின்படி, ஆதிகாலம் தொட்டே இறைவனடியார்கள், கடவுளைத் தாயாக எண்ணியே வழிபட்டு வந்தார்கள். தாய் எப்படி உலகிற்கு ஒரு குழந்தையை கொடுக்குமுன் தன் உடலையும், உள்ளத்தையும் தாய்மைப் படுத்தி பத்துமாதம் வயிற்றில் சுமந்து, சொல்லவொண்ணாத கஷ்டங்களை அனுபவித்து, பின் குழந்தையை உலகுக்கு அளிக்கிறாள். அதன் பின்னும் தன் அமுதூட்டி, சீராட்டி, பாராட்டி வளர்க்கிறாள். எந்நாளும் அவள் கருத்து குழந்தையின் நலனிலேயே இருக்கிறது.

குழந்தைக்கு ஒரு தீங்குவரின் உடல பதறி ஓடிவநது, அத்தீங்குகளை நீக்குகிறாள். அல்லது தன் உடலில் தாங்கிக் கொள்கிறாள். இதையே ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர், கடவுளுக்கு உயிர்களின் மேலிருக்கும் அன்பை எடுத்துக் காட்ட ஒரு உபமானககதை மூலம் அதை விளக்கியுள்ளார்.

ஒரு மனிதன் தன் மனைவியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு தாயைக் கொடுமை படுத்தினான். மனைவி ஒரு நாள் உன தாயை வெட்டி அவள் நெஞ்சை எனக்குக் கொண்டு வந்து கொடு என்றாள் கணவனும் அதன்படியே தாயைக் கொன்று நெஞ்சை மட்டும் எடுத்துக் கொண்டு மனைவியிடம் வேகமாகப்போகும் சமயம் அந்த தாயின் நெஞ்சு சொலலியதாம "மகனே பார்தது நடந்து போ. கீழே கூரான கற்கள் இருக்கின்றன, உன் காலில் குத்தி விடப் போகின்றது" என்று. அப்படியென்றால் நம்மைப் படைத்த இறைவனுக்கு நம் மேல் எவ்வளவு அன்பு இருக்கிறது என்று இதன் மூலம் கூறுகிறார்.

இதையே மாணிக்க வாசகப் பெருமானும் ஒரு பாடலில் "பெற்ற தாயின் சாலப் பரிந்து" என்று பாடியுள்ளார். தாய் தன்னலங் கருதாத அன்புக்கு ஒரு கோவில். அந்த தாயாக இருந்து இறைவன் நம்மையெல்லாம்பாது காத்து வருகிறான்.

ஒரு தாய் தன் குழந்தைகளை நன்கு அறிந்திருப்பாள். அதன்படியே நோயுற்ற குழந்தைக்கு சஞ்சியும், நலதிடமான குழந்தைக்கு சத்துள்ள உணவும், பத்தியமுள்ள குழந்தைக்கு பத்திய உணவும், கொடுத்து பாதுகாப்பாள். அதுபோலவே நம் எல்லா உயிர்களுக்கும் தாயான இறைவனும், அவரவர் மனப் பக்குவங்களுக்கு ஏற்ப, வாழ்க்கை அனுபவங்களைக் கொடுத்துக் காத்து வருகிறான். கஷ்டங்களையும், துன்பங்களையும் நமக்கு இறைவன் அளிப்பதும், நம்பால் உள்ள அளவற்ற கருணையாலேயே நம்மை அதன் மூலம் திருத்தி நல்லவர்களாக்கவே துன்பங்களை நமக்கு கொடுக்கிறான்.

தாயின் அன்புப் பணிகளின் நீண்டதொரு பட்டியலை, தன் 'அருட்பெருஞ்சோதி அகவல்' என்ற தோத்திரப் பாவில் திருஅருட்பிரகாச வள்ளலார் அவர்கள், இறைவனைத் தாயாகப் பாவித்து அத்தாயின் செயற்கரிய பணிகளை தெள்ளென விளக்கியுள்ளார்கள். அவைகள் யாதெனில் :-

சிருற வருளாந் தேசுறவழியாப்
பேருற வென்னைப் பெற்ற
நற்றாயே
பொருந்திய வருட்பெரும்
போகமே யுறுகெனப்
பெருந்தயவாலெனைப்
பெற்ற நற்றாயே
ஆன்ற சன்மார்க்க மணிபெற
வெனைத்தான்
ஈன்ற முதளித்த இனிய
நற்றாயே

என்று இவ்வற்புத பாடல் தொகுப்பில் 1071-வது அடி துவங்கி,

1114வது அடிவரை தன்னையீன்ற இறைவனின் தாய்க் கருணையை என்பும் உருகுமாறு மனமுகசிந்து பாடியுள்ளார்.

தாயானவள் தன்மகன் திருடனானாலும், கொலைகாரனானாலும் மற்றவர் அவனை வெறுத்திடினும், அவனுடைய தாயால் ஒரு நாளும் அவன் வெறுக்கப்பட மாட்டான். அதேபோல நாம் நல்வினை செய்தாலும், தீவினை செய்தாலும், இறைவன் தாயாக இருந்து நம் குற்றங்களை பொறுத்தருளி, நமக்கு நல்வழி காட்டுவான். இதை தாயுமானவ சுவாமிகள் தன் சுகவாரி என்ற பாடல் தொகுப்பு 9-வது பாடலில் 'பொல்லாத சேயெனில், தாய் தள்ளல் நீதமோ'' என்று ஊருக்குப் பொல்லாதவனானாலும் தாய்க்கு அவன் அன்பு பிள்ளை தான் என்றும் தாயான நீயே என்னைத் தள்ளிவிட்டால் வேறு யார் எனக்கு ஆதரவு கொடுப்பார் என்ற கருத்து தொனிக்க பாடுகிறார்.

நம் தாயிடம் நமக்கு எவ்வளவோ சலுகைகள். அவளிடம் சண்டை பிடித்து வாங்கும் உரிமைகள். அவள் மனம் களிப்புற நடந்தும், அவளுக்கு நல்லபிள்ளையாக நடந்தும், அவள் அன்பில் ஊறித் திளைக்கும், இன்பங்கள். இவைகள் ஒவ்வொருவருக்கும் தன் தாயினிடத்தில் ஏற்படும் மறக்க முடியாத அனுபவங்கள்.

இதனாலேயே முற்றும் துறந்த ஞானிகள்கூட உடல் பற்றை அறுத்துவிட்ட போதும், தன்னையீன்ற தாயின் மனம் கோணாமல் நடந்து, அவள் ஆசிகளைப் பெற்றனர். ஏனெனில் அவர்கள் தாயினிடத்தில் தெய்வத்தையும்,தெய்வத்தினிடம் தாயையும் ஏளங்க மற்றுக் கண்ட மகான்கள். ஆதி சங்கரர் தாயின் இறுதிகாலத்தில் தான் காசி மாநகரில் இருந்த போதும், ககனமார்க்மோக வந்து தாயின் அந்திமக் கிரியைகள் செய்தார் என்று அவர் சரித்திரம் இயம்புகிறது.

அதே?;போல பட்டினத்தடிகளும் தன் தாயாரின் இறுதிக் காலத்தில், அவள் சிதைக்கு எரியூட்டும்போது ''முந்தித் தவங்கிடந்து முன்னூறு நாள் சுமந்து'' என்று கல்லும் கசிய கனிந்துபாடுகிறார். நம் புதுமைக்கவி பாரதியும்கூட கண்ணன் என்ற கவிதை தொகுப்பில்

''உன்ன உன்னத்
தெவிட்டாதே—அம்மை
உயிரெனும் முலையினில்
உணர்வெனும்பால்
வண்ணமுறவைத்தெனக்கே
—என்றன்வாயினிற்
கொண்டூட்டுமோர்
வன்மையுடையாள்
கண்ணனெனும்
பெயருடையாள்......

என்று கண்ணனைத் தாயாக பாவித்து அவன் பேரன்பினை மெய்மறந்து பாடுகிறார். மேலும் திருச்சி மலைக் கோட்டையிலுறையும் எம்பெருமான் ஒரு ஏழைப் பெண்ணுக்குப் பேறு காலத்தில் அவள் தாயாக உருமாறி இருந்து ஏவல் செய்து மறைந்ததையென்னவென்று வியப்பது. அதனால் அன்றோ அக்கோவிலினில் உறையும் சிவலிங்கத் திருமேனிக்குத் தாயுமானவர் என்ற திருப்பெயர் உறைவதாயிற்று. உலகுக்கு உயிராகி அவ்வுயிரை உலகத்துக் கொடுக்கும் தாயும் அவனாகி எல்லாமாய் நின்று எவ்வுயிர்க்கும் சுடராய் ஒளிரும் எம்பெருமான் திருவடி நிழல்கள் போற்றி போற்றி. ஜயஜய போற்றி.

●

# இன்ப வீடு

T. T. C. எத்திராஜ்

மங்களமான மனை மாட்சியின் இருப்பிடம் வீடு. ஒரு துன்பமும் இல்லாமல் இன்பமே என்றுலும் குடிகொண்ட மோக்ஷ லோகத்திற்கும் நம் பெரியோர்கள் வீடு என்றே பெயரிட்டார்கள்.

மேல் நாட்டவரும் தாங்கள் வாழும் இன்பத்தை, "வீடு-இன்ப வீடு" என்றே பெருமிதத்துடன் அழைக்கிருர்கள். இன்பத்தையும் வீட்டையும் இணைத்துக் கூறுவதற்குக் காரணம் யாவரும் அறிந்ததே. அவரவர்கள் வீட்டில் தான், சுதந்திரத்துடன் தங்களை நன்ருக அறிந்த உற்ருர் உறவினருடன் மனம் விட்டுப் பழகி தங்கள் விருப்பப்படி நடந்துகொள்ள முடியும்.

ஆதலால்தான் சிறிய வீடாயினும் தன் வீடே எல்லா வசதிகளையும் உடைய வீடு போல் தோன்றி ஒருவன் மகிழ்ச்சியுடன் இருக்க உதவுகிறது.

நினைத்த மாத்திரத்திலேயே மனதில் இன்பம் சுரக்கக் கூடிய வீடாக இருக்க வேண்டுமானுல் அதற்கு சில சிறப்பு ம்சங்கள் தேவைப்படுகின்றன.

வீட்டின் சூழ்நிலை விரும்பத் தக்கதாகவும் சுகாதாரமுடையதாகவும் அமையவேண்டும். ஈரம் பாயாத காய்ந்த நிலப்பரப்பில் வீடு இருத்தல் மேலாகும். வீட்டைச் சுற்றிலும் குறைந்த அளவிலேனும் திறந்த வெளி வேண்டும். அதில் பார்ப்போருக்கு பரவசமூட்டும் வகையில் சிற்சில செடி கொடிகள் அமைதல் அவசியம்.

வீட்டின் உள்ளே போதிய அளவு காற்று வெளிச்ச வசதி அமைக்கவேண்டும் வீட்டின் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் கண்ணைக் கவரும் வண்ணப் பூச்சு செய்தல் நல்லது. வீட்டிற்கு வருவோர், வசிப்போர் உட்கார, படுக்க வசதிகள் இருக்கவேண்டும். கட்டில்நாற்காலிகள் அங்கே உள்ளவர்களின் நடமாட்டத்திற்கு இடைஞ்சல் இல்லாத வகையில் வைக்கவேண்டும். இயற்கைக் காட்சிகள் கொண்ட கிண்ணங்களும் உட்புற அழகை வெகுவாக அதிகரிக்கும்.

இவைகள் எல்லாவற்றையும் விட வீட்டில் இன்பம் நல்குவது அதில் வாழ்வோருடைய குண

நலன்களையும் பழக்கவழக்கங்களை யும் பொருத்திருக்கிறது.

ஒரு குடும்பத்தில் நிலவும் இன்பத்திற்கு ஆணிவேராக அமைந்தது அக்குடும்பத்தின் தலைவன் தலைவியின் உறவுத் தன்மையாகும். காதலர் இருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்டதே இன்பம் ஆதலால் கணவனும் மனைவியும் ஒருமித்த கருத்தினராய் வள்ளுவரும் வாசுகியும் போல் வாழ்ந்து காட்டவேண்டும். கணவன் இறைவனிடம் பக்திபூண்டவனாகவும் மனைவி கணவனிடம் பக்தி கொண்டவளாகவும் ஒழுகவேண்டும். இது வீட்டில் வளரும் குழந்தைகளுக்கு சிறந்த முன்மாதிரியாக அமைந்து பிற்காலத்தில் அவர்கள் நல்வாழ்வு நடத்த உதவும்.

பெற்றோர்கள் குழந்தைகளிடம் அன்புடனும், அவசியம் நேர்ந்த போது கண்டிப்புடனும், நடந்து கொள்ள வேண்டும் வீட்டில் உள்ளவர்கள் யாவருமே மனம்விட்டுப் பேசி சுமுகமாகப் பழக வேண்டும். சிறுசிறு பூசல்கள் ஏற்பட்டால் அவைகளை உடனே மறந்து விடுதல் நல்லது.

வீட்டில் உள்ளோர் யாவரும் இறைவனிடம் பக்தி கொண்டு தினமும் வணங்கவேண்டும். அப்போது இறைவனின் அருளாட்சி அங்கே நிலவும். அதனால் என்றும் இன்பம் நிலவும்.

ஆண்களும் பெண்களும் சரிநிகர் சமானமென்பது கொள்கையளவில் உண்மையாயினும், நடைமுறையில் பெண்கள் ஆண்களிடம் மரியாதையுடனும் அடக்கத்துடனும் நடந்து கொள்வதும், ஆண்கள் பெண்களிடம் அன்பும் பரிவும் காட்டுதலும் அவ்வீட்டில் அமைதியையும் மகிழ்ச்சியையும் பெருக்கும் என்பதில் ஐயமில்லை.

நாம் ஒரு சமுகத்தில் கூடி வாழ்வதால், பிறரிடம் பழகும் விதத்தாலும் நம் வீட்டை இன்ப வீடாக்கலாம். அவ்வப்போது நண்பர்களை குடும்பத்துடன் வீட்டுக்கழைத்து உபசரிப்பதனால், பழைய தண்ணீர் தேங்கிய குளத்தில் புதுப்புனல் பாயும்போது ஏற்படும் தெளிவும், புதுமையும், குளுமையும் நம் வீட்டில் உள்ளவர்கள் பெற ஏதுவாகும்.

வீட்டின் விரிவே ஊரும் நாடும் உலகமும் ஆதலால் ஒவ்வொரு வீடும் இன்ப வீடாய் இருந்தால் இவ்வுலகமே மனித குலம் வாழும் இன்ப வீடாகி விடும்.

—

உள்ளம் என்னும் பரந்த இடத்தை ஆசை என்னும் புயல் அலைக்கும் வரையில், அதில இறைவனின் திவ்ய ஒளியைப் பார்ப்பதற்கு வாய்ப்பே உண்டாகாது. சாந்தி பெற்று இறைவன்பால ஊறிய உள்ளத்தில்தான கடவுளின் அற்புத ஆனந்தக் காட்சியைக் காண முடியும்

—பகவான் ராமகிருஷ்ணர்

# மனிதரில்தான் எத்தனை ரகங்கள்

திரு. ஆர். ரெங்கராஜன்

தினமும் பல மனிதர்களைப் பார்க்கிறோம். எத்தனையோ பேருடன் பழகுகிறோம். ஒவ்வொருவரிடத்திலும ஒவ்வொரு குணங்களைக் காண்கிறோம். நாணயத்திற்கு இரண்டு பக்கம் இருப்பது போல; இன்பம் என்றிருந்தால் துன்பம் உடனிருப்பது போல; இருளிருந்தால் ஒளியும் இருப்பது போல; லாபமென்றிருந்தால் நஷ்டமும் இருப்பதுபோல; மனிதரிலும் நலலவரும் கெட்டவரும் கலந்தே சமூகத்தில் உலவுகிறார்கள். பல்வேறு மனிதர்களுடன நமக்குக் கிடைக்கும அனுபவத்தை வைத்தல்லவா மனிதனுககு மதிப்பு கிடைக்கிறது.

ஆளைக் கண்டவுடன் போலிக்கு அல்லது ஒப்புக்கு சிரித்துவைத்து, நேரத்துக்கு உதட்டளவில் உப சரிப்பவர்களும் இருக்கிறார்கள்.

எப்பொழுதாவது ஒரு முறைக் கண்டாலும் உள்ளன்புடன் நமது நலனைப்பற்றி அக்கறையுடன் விசாரிப்பவர்களும் இருககிறார்கள்.

பார்ப்பதற்கு நெருங்கிய நண்பர்கள்போல் இருந்து ஒருவருக்கொருவர் கடனுதவி செய்து கொண்டே இருந்தால், உனக்கு நான் அண்ணன் மாதிரி, எனக்கு நீ தம்பி மாதிரி என்று குலவுபவர்களும் உண்டு.

எப்போதுபார்த்தாலும் கடன் கேட்டுக் கொண்டிருக்கிறானே என்று ஒருமுறை மறுத்து வைத்தால, பயலுக்கு பாங்கில் பாலன்ஸ் ஏறி விட்டது; அதுதான் திமிர் பிடித்து அலைகிறான் என்று திருப்பிக் கொள்பவர்களும் உண்டு.

ஏதேனும் ஒரு சப்ஜெக்டைப் (பொருள—பகுதியை) பற்றித் தனக்குத் தெரியாமலிருந்தால் கூட மற்றவர்கள் அதுபற்றி தன்னை மட்டமாக நினைத்துவிடக் கூடாதே என்று ஏதோ ஒன்றிரண்டு வார்த்தைகளை மட்டும் அந்த சப்ஜெக்ட் சம்பந்தமாகக் கற்று வைத்துககொண்டு எல்லாமே தெரிந்ததுபோல நடிப்பவர்களும் உண்டு. ஆழமற்ற கடலின் அலைகளை ஒத்தவர்கள் இவர்கள்.

பார்ப்பதற்கு மண்டு மாதிரி இருந்துகொண்டு இருப்பவரிடம் நெருங்கிப் பழகிப் பார்த்தால் விஷய ஞானம் உள்ளவர்தான் என்று மற்றவர்கள் தீர்மானம் எடுகக வைக்கும்படி செய்பவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆழ்கடலின் அமைதியை ஒத்தவர்கள இவர்கள்.

பகவானை தரிசிக்கப் போகிறேன் என்று பக்திமனம் கமழக் கூறி விட்டு, அங்குபோய் ஊர்

வம்பு பேசுபவர்களும் இருக்கிறார்கள். கோவிலின் புனிதத் தன்மையை பாழாக்கிக் கொண்டிருப்பவர்களே இந்த பக்தி சிரோன்மணிகள்தான்.

அடிக்கடி கோவில்குளம் என்று செல்லாவிட்டாலும் ஐந்து நிமிடம் பகவானை தியானித்தாலும் மெய்யான பக்தியுடன் உள்ளம் ஒன்றி தியானிப்பவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். இவர்கள் முன்னவர்களைக் காட்டிலும் மேலானவர்கள்.

அடிக்கடி எங்கேயாவது தியேட்டரில் ஆங்கிலப் படத்தின் ஆபாசமான ஸைன்ரீல்காண்பிப்பதாகத் தகவல் கிடைத்தால் போதும், விழுந்தடித்துக் கொண்டு போய் பார்த்துவிட்டு ஏமாந்து திரும்புபவர்களும் இருக்கிறார்கள். இவர்கள் மனதைக் கட்டுப்படுத்தாமல் மனம் போன போக்கில் நடந்து கொள்ளுபவர்களைச் சேர்ந்தவர்கள்.

அந்தி பூக்காற்போல் அருமையான படங்களை அபூர்வமாகப் பார்த்துவிட்டு ரசனை உணர்ச்சி இல்லாதவர் என்று மற்றவர்களிடம் வாங்கிக் கட்டிக் கொள்பவர்களும் இருக்கிறார்கள்.

தனக்குக் கீழ் உள்ளவன் முன்னுக்கு வந்துவிடுவானோ என்ற பயத்தில் அவனைப்பற்றி மேலதிகாரிகளிடம் குறைகூறியோ, திறமையைக் குறைத்து மதிப்பிட்டோகூறி, தான் நல்லபெயர் எடுத்துக் கொண்டு முன்னுக்கு வருபவர்களும் உண்டு.

ஆண்டவன் ஒருவன் மேலே இருக்கிறான். எதற்கும் அவன் பார்த்துக் கொள்வான், யானைக்கொரு காலமென்றால் பூனைக்கொரு காலம் வராதா? அவன் காட்டில் பெய்யும் மழை என் காட்டிலும் ஒருநாள் பெய்யாமலா போய்விடும்? என்றெல்லாம் மனதைத் தேற்றிக் கொண்டு இருப்பவர்களும் உலவத்தான் செய்கிறார்கள்.

அடுத்தவன் எப்பொழுது அசந்திருப்பான் என்று காத்திருப்பவர்களும் உண்டு. அடுத்தவனும் வாழவேண்டும், தானும் வாழவேண்டும் என்று நினைக்கும் நல்ல மனங்களுடையவர்களும் இருக்கிறார்கள்.

நமக்கு ஒரு கஷ்டம் வந்தால் தானாகமுன்வந்து உதவுபவர்களும் இருக்கிறார்கள். எட்ட நின்று வேடிக்கை பார்த்து மகிழ்பவர்களும் இல்லாமலில்லை.

இதோ தருகிறேன் என்று பணத்தை நம்மிடமிருந்து வாங்கிக் கொண்டு இன்று நாளை என்று இழுத்தடிப்பவர்களும் உண்டு.

நாம் கேட்பதற்கு முன்னதாகவே நாணயமாகத் திருப்பித் தருகிறவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

இப்படி இன்னும் எத்தனையோ பேர்களைச் சொல்லலாம். இவர்கள் அத்தனை பேருடனும் பழகும் போதுதான் அனுபவ அறிவு வளர்கிறது. மனிதர்களின் தராதரம், பேசும் முறை, பழகும் தன்மை இவற்றை அறிந்து கொள்ள அந்த அனுபவம் நமக்கு உதவுகிறது. மனிதரில்தான் எத்தனை ரகங்கள்! ஒவ்வொருவரையும் இன்டிவிஜுவலாகத்தான் (தனித்தனியாகத்தான்) தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது! உண்மையாகவே மனிதன் ஒரு பல்கலைக்கழகம்தான்!

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமானுஜன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-600087 அச்சிடுபவர்: சௌடா. கா. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், சி. ஐ. டி. நகர், சென்னை-600035